# துடுப்பாட்டம்

கிரிக்கெட்டும் கிரிக்கெட் சார்ந்தும்

கிரிக்கெட் தமிழ் மாத இதழ்

ஜூன் - 2025

(19 வது இதழ்)

நன்றி!

ரோஹித் – விராட்



# துடுப்பாட்டம் மாத இதழ்

# ஜூன் 2025

**இன்னிங்ஸ் 2** **ஓவர் 6**

**<u>வடிவமைப்புக் குழு</u>**


***S. பழனி செல்வகுமார்*** ***கா. இராமச்சந்திரன்***

***கார்த்திகேயன்*** ***ஞா. மைக்கேல்ராஜ்***


---

***வணக்கம், அன்புடையீர்!***

***எல்லையில் பதட்டம் என்றதும் போட்டியை நிறுத்தி வீரர்களை/ பொதுமக்களை பாதுகாப்பாக இருக்க வைத்த கிரிக்கெட் வாரியத்திற்கு பாராட்டுகள்.***

***இந்த இதழில் ஐபிஎல் அணிகளின் செயல்பாடு குறித்த கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இந்தக் கட்டுரைகள் ஒரு கிரிக்கெட் வீரர் பார்வையிலோ, பயிற்சியாளர் பார்வையிலோ எழுதப்பட்டது அல்ல. ரசிகரின் பார்வையில் எழுதப்பட்டவை.***

***கிரிக்கெட்டின் சிறப்பே ஆட்டத்தின் நுணுக்கங்கள், விதிமுறைகள், செயல்பாடுகளை எளிதாகப் பலரும் புரிந்து கொள்ள முடியும் என்பது தான். ஆகவே ரசிகரின் பார்வை என்பது கூட ஒரு மிகச்சிறந்த ஆட்ட நுணுக்கங்களை/ பார்வைகளை முன் வைக்கும்.***

---


*நன்றி :*

*படங்கள் - இணையதளம்*

*தரவுகள் -ESPNCricinfo மற்றும் ICC இணையதளம்*



தொடர்புக்கு வாட்சப் - +91 80566 09320

Thuduppattam7@gmail.com

X - @thuduppattam


கிரிக்கெட்டும் கிரிக்கெட் சார்ந்தும்






நானும் கிரிக்கெட்டும் பகுதி அடுத்த இதழில் இடம் பெறும்.

# <u>பஞ்சாப் கிங்ஸ்</u>

- *பிரதீஷ் (@1291Pradeesh)*

அணித்தேர்வு செய்வதில் இருந்தே ஒரு தெளிவு. எவ்வளவு வெளிநாட்டு வீரர்கள் எடுத்தாலுமே, ஒரு ஆட்டத்தில் நான்கு வீரர்கள் தான் விளையாட வைக்க முடியும், அதனால் மொத்தமே எட்டு வெளிநாட்டு வீரர்கள் தான் எடுக்கப்பட்டது. அதிலும் ஐந்து வீரர்கள் ஆல்ரவுண்டர்கள். பிரப்சிம்ரன் மற்றும் ஷஷங்க் ஆகிய இரு இளம் வீரர்களைத் தக்கவைத்தது அருமை.

அதே போல RTM-ல் அர்ஷ்தீப் சிங்கை எடுத்ததும் அருமை, அதற்கு ஏற்றார் போல் அவர்கள் தங்களது சிறப்பான ஆட்டத்தை வெளிப்படுத்தியது சிறப்பு. ஸ்ரேயாஸ் ஐயரை அணியில் கொண்டு வந்தது தான் அணியோட பலமே. இன்னும் ஒரு பத்து கோடி கூட தந்து இருக்கலாம். அதே போன்று ஏலத்தில் புதிதாக எடுக்கப்பட்ட வீரர்களான ப்ரியன்ஷ் ஆர்யா, விஜயகுமார் வைஷாக், நேகல் வதேரா, சாஹல், ஹர்ப்ரீட் ப்ரார் என எல்லாருமே அருமையான தேர்வு.

அணியோட பலமே எல்லா வீரர்களுமே தங்களோட விளையாட்டை விளையாடித் தந்தார்கள். எப்படி சரிவுல இருந்தாலும் அதை நேர்படுத்திக் கொண்டுபோறது, பேட்டிங்கில் முதல் எட்டு வீரர்கள் வரை ஆட்டத்தை நிலையாக வைப்பது, ஆட்டத்தின் போக்கு எப்படி அமைந்தாலும் அதற்கேற்பத் திட்டமிட்டு செயல்பட்டது, முதல் பேட்டிங் என்றால் 200-க்கும் மேல அடிக்கிறது எனஅவங்களோட வலிமை ஏராளம்.

பலவீனம் என்றால் பீல்டிங்கில் பல ஆட்டங்களில் முக்கியமான கேட்ச் விடுவது, பீல்டிங்கில் நிறைய ரன்களை விடுவது, பந்து வீச்சாளர்களை சரியான நேரத்துல சூழலுக்கு ஏற்றுப் பயன்படுத்தாதது இவைகள் தான். அதிக ரன்கள் அடித்த ஆட்டத்தில் சற்று அலட்சியமாக விளையாடியதும் நிகழ்ந்தது.



ஆடும் பதினொன்றைப் பொறுத்தவரை தொடக்க வீரர்கள் இருவரும் (ஆர்யா-ப்ராப்சிம்ரன்) சரி, அடுத்து வந்த இருவரும் (இங்லீஷ்-ஸ்ரேயாஸ்) சரி, நடுவில் வந்த இருவரும் (நேகல்-ஷஷாங்க்) என எல்லா இடத்திலும் யாராவது ஒருவர் முன்னெடுத்து ஆட்டத்தை சிறப்பாக வெளிப்படுத்தினர். பந்து வீச்சும் அதே போல் தான்.

ஆடும் 11 தேர்வு செய்வது, எந்த அணிக்கு எதிராக ஆடுகிறோம், எந்த சூழலில் ஆடுகிறோம் என்பதைப் பொறுத்து, ஆட்டத்திற்கு ஆட்டம் சிறு மாற்றம் இருந்தது. இம்பேக்ட் பிளேயரும் அது போன்றே தேர்வு செய்யப்பட்டனர்.




இருபது ஓவர் போட்டியில் தொடக்க ஆட்டக்காரர்கள் பயமின்றி அதிரடியாக ஆடுபவர்களாக இருக்க வேண்டும் அந்த வகையில் பயமறியா இரண்டு இளம் வீரர்களாகக் களம் கண்ட **ப்ராப்சிம்ரன்-ஆர்யா இணை முறையே 549 & 475 ரன்களை விளாசினர். ஸ்ரேயாஸ்ன் அட்டகாசமான பார்ம் (604 ரன்கள்)**, இங்லீஷ்ன் அதிரடி ஆட்டம் மற்றும் அர்ஷ்தீப்ன் அபார பந்து வீச்சு பஞ்சாப் அணியின் பலமாகத் தொடர்ந்தது.

அணித்தலைவர் ஸ்ரேயாஸ் ஐயர் குறித்து சொல்லனும்னா calm & composed. அவரோட வியூகம் வேற மாதிரி. நீங்க ஒன்றை எதிர்பார்த்து இருப்பீங்க, அதை வேற மாதிரி பண்ணுவாரு. அவர அதுக்காகத் திட்டிட்டு இருப்பீங்க. ஆனா அதுவே வெற்றிக்கு காரணமா இருக்கும். பீல்டு மிஸ் பண்ணாலோ, ஓவர் சரியா போடலைனாலும், அவங்கள ஹர்ட் பண்ணாம, அந்த ஸ்பெல்-ல இருந்து எடுக்காம, அவங்களுக்கே தருவாரு. சில தைரியமான முடிவுகள், வீரர்களை அவங்க சுதந்திரமா விளையாட வழி வகுத்தது.

தன்னை விட அணி தான் பிரதானம் என்று செயல்பட்டார். **"He is not just a captain, He is a leader who stand tall in front"**. சிறப்பான தலைமைப்பண்பு கொண்ட தலைவராக செயல்பட்டார்.




முழுவதுமாக புதிய அணியாகக் கட்டமைக்கப்பட்டு ஆடும் 11 ல் பெரும்பாலும் இளம் மற்றும் அன்-கேப்டு வீரர்களைக் கொண்டு சிறப்பாக செயல்பட்ட அணி, முதல் சுற்றில் புள்ளிப்பட்டியலில் முதல் இடம் பெற்றது. தகுதிச்சுற்று 1-ல் முற்றிலும் வேறு அணியாக விளையாடி பெங்களூருவிடம் தோல்வி கண்டது. இரண்டாவது வாய்ப்பை வெறித்தனமாகப் பயன்படுத்தி அசுர பலம் கொண்ட மும்பை அணியை எதிர்த்து 200+ ரன்களை சேஸ் செய்து இறுதிப்போட்டிக்கு வந்த பஞ்சாப் அணி, கோப்பையை வெல்ல அனைத்தையும் சிறப்பாக செய்து கடைசி நாளன்று சிறு சிறு அலட்சியங்களால் 6 ரன்களில் வெற்றியை நழுவவிட்டது வருத்தமே. இருப்பினும் இந்தத் தொடரின் இரண்டாவது இடத்தைப் பிடித்ததற்கு வாழ்த்துகள்.

**எந்த ஒரு அணியும், அணியாக செயல்பட்டால்தான் சிறப்பான ஆட்டம் வெளிப்படுத்த முடியும். அந்த வகையில் பஞ்சாப் அணியின் கதாநாயகர்களாக ப்ரியன்ஷ் ஆர்யா, ப்ராப்சிம்ரன் சிங், ஸ்ரேயாஸ் ஐயர், நேகல் வதோரா, ஷஷாங்க் சிங், அர்ஷ்தீப், ஹர்ப்ரீட் ப்ராரைக் குறிப்பிடுவேன்**.

# ரோகித் சர்மா

ஒரு புதிய டெஸ்ட் சாம்பியன்ஷிப் தொடர் தொடங்குவதற்கு முன்பாக டெஸ்ட் போட்டிகளில் இருந்து ஓய்வு பெற்றுள்ளார் இந்திய கேப்டன் ரோகித் சர்மா.

பார்டர் - கவாஸ்கர் தொடர் தோல்வி, அதற்கு முன்பாக நடந்த நியூசிலாந்து அணிக்கு எதிரான தொடர் தோல்வியும், ரோகித்தை இந்த முடிவை நோக்கித் தள்ளி இருக்கலாம்.

2013ல் டெஸ்ட் போட்டிகளில் அறிமுகம் ஆன ரோகித், அறிமுகப் போட்டியில் அதிக ரன்கள் குவித்த இரண்டாவது வீரர் 177 ரன்கள் ( முதலிடம் ஷிகர் தவான் 187 ரன்கள்).

முரளி விஜய்க்குப் பிறகு இந்திய டெஸ்ட் அணியின் துவக்க வீரர் பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு வழங்கியவர் ரோகித் சர்மா. வெள்ளைப் பந்தில் அரக்கன் போல் ஆடும் ரோகித் சர்மா சிவப்பு பந்தில் சற்றே அமைதியான முறையில் ஆடியுள்ளார்.

67 போட்டிகளில் 116 இன்னிங்ஸ்களில் 4301 ரன்கள் அடித்துள்ளார் ரோகித். 12 சதங்கள், 18 அரை சதங்கள். இந்தியாவில் நடைபெற்ற போட்டிகளில் 2535 ரன்களும், வெளிநாடுகளில் நடைபெற்ற போட்டிகளில் 1766 ரன்களும் அடித்துள்ளார்.




4 முறை ஆட்டநாயகன் விருது பெற்றுள்ளார் ரோகித். அதில் இரண்டு முறை இரண்டாவது இன்னிங்ஸில் சதமடித்ததால் என்பது குறிப்பிடத்தக்கது.

ஓய்வை அறிவித்துக் கொண்டாடத்துடன் கடைசிப் போட்டியில் ஆடவில்லை என்பது ரசிகர்களின் வருத்தம். அதே சமயம் சரியான நேரத்தில் ஓய்வை அறிவித்து இந்திய அணி புதிய தொடக்கத்தை நிகழ்த்த வழி வகுத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. ரோகித் சர்மாவைத் துடுப்பாட்டம் குழு வாழ்த்துகிறது.

# கிரிக்கெட்டோவியம்






R. Krithvik

4th Std

Pinkz Public School

Thiruvannamalai




P. Adith Surya

8th Std

Sri Sankara Vidhyalaya

Urappakkam




S. Sivaprakash

4th Std

Amala matric He. Sec School

Musiri




S. Dhivya

5th Std

Amala matric Hr. Sec School

Musiri




S. Sivaprakash, 4th Std, Amala matric He. Sec School, Musiri




Nithilan Pon Ilango, Grade -4




M.Sanaa Merlin

NMHSS




S. Dhivya, 5th Std, Amala matric Hr. Sec School, Musiri




S. Dhivya, 5th Std, Amala matric Hr. Sec School, Musiri




P. Adith Surya, 8th Std, Sri Sankara Vidhyalaya, Urappakkam

# கவர் ஸ்டோரி

ப்ளே ஆஃப் சுற்றுக்கு பெங்களூரு, பஞ்சாப், குஜராத், மும்பை அணிகள் தகுதி பெற்றன. குஜராத் அணி கடைசி இரண்டு போட்டிகளில் தோற்றதால் எலிமினேட்டர் சுற்றில் ஆடியது.

**குவாலிபயர் 1, மே 29, முல்லான்பூர்**

குவாலிபயர் 1 ல் பஞ்சாப் அணியைத் தலை தூக்கவே விடவில்லை பெங்களூரு அணி. பஞ்சாப் 101 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. பெங்களூரு அணி எளிதாக வென்று இறுதிப் போட்டிக்குச் சென்றது.

*பஞ்சாப் - 101*

மார்க்கஸ் ஸ்டோய்னிஸ் - 26

சுயாஷ் சர்மா - 3/17

*பெங்களூரு - 106/2*

பில் சால்ட் - 56*

கைல் ஜெமிசன் & முஷீர்கான் - 1/27

***பெங்களூரு 8 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் - சுயாஷ் சர்மா - 3/17




**எலிமினேட்டர், மே 30, முல்லான்பூர்**

எலிமினேட்டரில் மும்பை அணி 228 ரன்களைக் குவித்தது. சவாலான இலக்கை குஜராத் அணியால் நெருங்க முடியவில்லை.

*மும்பை - 228/5*

ரோகித் சர்மா - 81

சாய் கிஷோர் - 2/42

*குஜராத் - 208/6*

சாய் சுதர்சன் - 80

ட்ரெண்ட் பவுல்ட் - 2/56

***மும்பை 20 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் - ரோகித் சர்மா 81




**<u>குவாலிபயர் 2, ஜூன் 1, அகமதாபாத்</u>**

குவாலிபயர் 2ல் ஸ்ரேயாஸ் ஐயரின் நேர்த்தியான ஆட்டம் பெரிய இலக்கை சேஸ் செய்ய உதவியது.

*மும்பை - 203/6*

திலக் வர்மா & சூர்யகுமார் - 44

ஓமர்சாய் - 2/43

*பஞ்சாப் - 207/5*

ஸ்ரேயாஸ் ஐயர் - 87*

அஸ்வனி குமார் - 2/55

***பஞ்சாப் 6 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது***

ஆட்ட நாயகன் - ஸ்ரேயாஸ் ஐயர் - 87*




**<u>இறுதிப் போட்டி, ஜூன் 3, அகமதாபாத்</u>**

இறுதிப் போட்டியில் இதுவரை கோப்பையை வெல்லாத இரு அணிகள் மோதின. பஞ்சாப் அணி டாஸ் வென்று பந்துவீச்சைத் தேர்வு செய்தது. கோலி நிதானமாக ஆட மற்றவர்கள் அதிரடியாக ஆடுவது போல இருந்தது ஆட்டம். மற்றவர்கள் எப்படியும் ஆடட்டும், எனது ஆட்டம் அனுபவமிக்க நேர்த்தியான ஆட்டம் என்று ஆடினார் கோலி. எல்லாரும் கொஞ்சம் கொஞ்சம் பங்களிக்க பெங்களூரு 190 ரன்கள் எடுத்தது.

பஞ்சாப் அணி சிறப்பாகத் துவங்கியது என சொல்ல முடியாது. சில பந்துகள் ஆள் இல்லாத இடங்களில் விழுந்தன. ஒரு கேட்ச் மிஸ். ஆனாலும் ரன்கள் வந்தன. இடை இடையே கடின ஓவர்களை வீசினர் பெங்களூரு பந்துவீச்சாளர்கள்.

முதல் இரண்டு விக்கெட்டுகளை சிறப்பான கேட்ச் மூலம் வெளியேற்றினர். ஒரு பக்கம் ரன்கள் வந்தாலும், ரன் அடிக்க முடியாத பந்துகளை வீச அழுத்தம் ஏற்படுத்தி விக்கெட்டுகளை வீழ்த்தினர். இறுதி ஓவர்களில் கொஞ்சம் ரன்கள் போனது. ஆனாலும் பெங்களூரு அணி 6 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது.

*பெங்களூரு - 190/9*

விராட் கோலி -43

அர்ஷதீப் சிங்- 3/40

*பஞ்சாப் - 184/7*

ஷஷாங் சிங் - 61*

குர்னால் பாண்ட்யா - 2/17

***பெங்களூரு 6 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்டநாயகன் – குர்னால் பாண்ட்யா - 2/17



**குஜராத் டைட்டன்ஸ்**

| | |
|---|---|
| அணி பதிவு செய்த அதிகபட்ச ரன்கள் | - 232/5 எதிர் பஞ்சாப் |
| அணியின் குறைந்த பட்ச ரன்கள் | - 147 எதிர் சென்னை |
| வெற்றி இலக்கை எட்டிய அதிகபட்ச ரன்கள் | - 204/3 எதிர் டெல்லி |
| தனிநபர் அதிகபட்ச ரன்கள் | - சாய் சுதர்சன் (108*) |
| சதங்களின் எண்ணிக்கை | - 1 |
| அதிக ரன்கள் அடித்த வீரர் | - சாய் சுதர்சன் (759) |
| அதிக விக்கெட்டுகள் வீழ்த்திய வீரர் | - பிரசித் கிருஷ்ணா (25) |

**கொல்கத்தா நைட்ரைடர்ஸ்**

| | |
|---|---|
| அணி பதிவு செய்த அதிகபட்ச ரன்கள் | – 234/7 எதிர் லக்னோ |
| அணியின் குறைந்த பட்ச ரன்கள் | – 95 எதிர் பஞ்சாப் |
| வெற்றி இலக்கை எட்டிய அதிகபட்ச ரன்கள் | – 153/2 எதிர் ராஜஸ்தான் |
| தனிநபர் அதிகபட்ச ரன்கள் | – குயின்டன் டீ காக் (97*) |
| சதங்களின் எண்ணிக்கை | - 0 |

| | |
|---|---|
| அதிக ரன்கள் அடித்த வீரர் | - அஜிங்கியா ரஹானே (390) |
| அதிக விக்கெட்டுகள் வீழ்த்திய வீரர் | – வருண் சக்ரவர்த்தி (17)<br>வைபவ் அரோரா (17) |

**<u>சன்ரைசர்ஸ் ஹைதராபாத்</u>**

| | |
|---|---|
| அணி பதிவு செய்த அதிகபட்ச ரன்கள் | – 286/6 எதிர் ராஜஸ்தான் |
| அணியின் குறைந்த பட்ச ரன்கள் | - 120 எதிர் கொல்கத்தா |
| வெற்றி இலக்கை எட்டிய அதிகபட்ச ரன்கள் | – 247/2 எதிர் பஞ்சாப் |
| தனிநபர் அதிகபட்ச ரன்கள் | - அபிஷேக் சர்மா (141) |
| சதங்களின் எண்ணிக்கை | - 3 |
| அதிக ரன்கள் அடித்த வீரர் | - ஹென்ரிக் கிளாஸ்ஸன் (487) |
| அதிக விக்கெட்டுகள் வீழ்த்திய வீரர் | – பாட் கம்மின்ஸ் (16)<br>ஹர்சல் பட்டேல் (16) |

**<u>சென்னை சூப்பர் கிங்ஸ்</u>**

| | |
|---|---|
| அணி பதிவு செய்த அதிகபட்ச ரன்கள் | – 230/5 எதிர் குஜராத் |
| அணியின் குறைந்த பட்ச ரன்கள் | – 103/9 எதிர் கொல்கத்தா |
| வெற்றி இலக்கை எட்டிய அதிகபட்ச ரன்கள் | – 183/8 எதிர் கொல்கத்தா |
| தனிநபர் அதிகபட்ச ரன்கள் | - ஆயுஷ் மகட்ரே (94) |
| சதங்களின் எண்ணிக்கை | - 0 |
| அதிக ரன்கள் அடித்த வீரர் | - சிவம் துபே (357) |
| அதிக விக்கெட்டுகள் வீழ்த்திய வீரர் | - நூர் அகமது (24) |

**<u>டெல்லி கேப்பிட்டல்ஸ்</u>**

| | |
|---|---|
| அணி பதிவு செய்த அதிகபட்ச ரன்கள் | – 208/4 எதிர் பஞ்சாப் |
| அணியின் குறைந்த பட்ச ரன்கள் | - 121 எதிர் மும்பை |
| வெற்றி இலக்கை எட்டிய அதிகபட்ச ரன்கள் | - 208/4 எதிர் பஞ்சாப் |
| தனிநபர் அதிகபட்ச ரன்கள் | – கே எல் ராகுல் (112*) |
| சதங்களின் எண்ணிக்கை | - 1 |
| அதிக ரன்கள் அடித்த வீரர் | - கே எல் ராகுல் (539) |
| அதிக விக்கெட்டுகள் வீழ்த்திய வீரர் | - குல்தீப் யாதவ் (15) |

**பஞ்சாப் கிங்ஸ்**

| | |
|---|---|
| அணி பதிவு செய்த அதிகபட்ச ரன்கள் | – 245/6 எதிர் ஹைதராபாத் |
| அணியின் குறைந்த பட்ச ரன்கள் | – 98/5 எதிர் பெங்களூரு# |
| வெற்றி இலக்கை எட்டிய அதிகபட்ச ரன்கள் | – 207/5 எதிர் மும்பை |
| தனிநபர் அதிகபட்ச ரன்கள் | – பிரியான்ஷ் ஆர்யா (103) |
| சதங்களின் எண்ணிக்கை | - 1 |
| அதிக ரன்கள் அடித்த வீரர் | - ஸ்ரேயாஸ் ஐயர் (604) |
| அதிக விக்கெட்டுகள் வீழ்த்திய வீரர் | - அர்ஷதீப் சிங் (21) |

# சேஸ் செய்து வெற்றி

**மும்பை இந்தியன்ஸ்**

| | |
|---|---|
| அணி பதிவு செய்த அதிகபட்ச ரன்கள் | – 228/5 எதிர் குஜராத் |
| அணியின் குறைந்த பட்ச ரன்கள் | – 121/2 எதிர் கொல்கத்தா# |
| வெற்றி இலக்கை எட்டிய அதிகபட்ச ரன்கள் | - 177/1 எதிர் சென்னை |
| தனிநபர் அதிகபட்ச ரன்கள் | – ரோகித் சர்மா (81) |
| சதங்களின் எண்ணிக்கை | - 0 |
| அதிக ரன்கள் அடித்த வீரர் | - சூர்யகுமார் யாதவ் (717) |
| அதிக விக்கெட்டுகள் வீழ்த்திய வீரர் | - டிரண்ட் பவுல்ட் (22) |

# சேஸ் செய்து வெற்றி

**ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு**

| | |
|---|---|
| அணி பதிவு செய்த அதிகபட்ச ரன்கள் | – 230/4 எதிர் லக்னோ |
| அணி வீழ்ந்த குறைந்த பட்ச ரன்கள் | – 95/9 எதிர் பஞ்சாப் |
| வெற்றி இலக்கை எட்டிய அதிகபட்ச ரன்கள் | - 230/4 எதிர் லக்னோ |
| தனிநபர் அதிகபட்ச ரன்கள் | - ஜித்தேஷ் சர்மா (85*) |
| சதங்களின் எண்ணிக்கை | - 0 |
| அதிக ரன்கள் அடித்த வீரர் | - விராட் கோலி (657) |
| அதிக விக்கெட்டுகள் வீழ்த்திய வீரர் | - ஜோஷ் ஹேசல்வுட் (22) |

**ராஜஸ்தான் ராயல்ஸ்**

| | |
|---|---|
| அணி பதிவு செய்த அதிகபட்ச ரன்கள் | – 242/6 எதிர் ஹைதராபாத் |
| அணியின் குறைந்த பட்ச ரன்கள் | – 117 எதிர் மும்பை |
| வெற்றி இலக்கை எட்டிய அதிகபட்ச ரன்கள் | - 212/2 எதிர் குஜராத் |
| தனிநபர் அதிகபட்ச ரன்கள் | - வைபவ் சூர்யவன்சி (101) |
| சதங்களின் எண்ணிக்கை | - 1 |
| அதிக ரன்கள் அடித்த வீரர் | – யெஜெஸ்வி ஜெய்ஸ்வால் (559) |
| அதிக விக்கெட்டுகள் வீழ்த்திய வீரர் | - வானிந்து ஹசரங்க (11)<br>ஜோப்ரா ஆர்ச்சர் (11)<br>மகீஷ் தீக்சானா (11) |

**லக்னோ சூப்பர் ஜெயின்ட்ஸ்**

| | |
|---|---|
| அணி பதிவு செய்த அதிகபட்ச ரன்கள் | - 238/6 எதிர் கொல்கத்தா |
| அணியின் குறைந்த பட்ச ரன்கள் | - 159/6 எதிர் டெல்லி |
| வெற்றி இலக்கை எட்டிய அதிகபட்ச ரன்கள் | - 193/5 எதிர் ஹைதராபாத் |
| தனிநபர் அதிகபட்ச ரன்கள் | - ரிசப் பண்ட் (118*) |
| சதங்களின் எண்ணிக்கை | - 2 |
| அதிக ரன்கள் அடித்த வீரர் | - மிட்செல் மார்ஷ் (627) |
| அதிக விக்கெட்டுகள் வீழ்த்திய வீரர் | - திக்வேஸ் ரத்தி (14) |

*ஜோஷ் ஹேசல்வுட் தான் இறுதிப் போட்டியில் ஆடிய அனைத்து அணிகளையும் வெற்றி பெற வைத்துள்ளார்.*
*சாம்பியன்ஸ் லீக் - 2012*
*ஒருநாள் உலகக் கோப்பை -2015*
*ஐபிஎல் - 2021*
*டி20 உலகக் கோப்பை - 2021*
*ஒருநாள் உலகக் கோப்பை - 2023*
*ஐபிஎல் – 2025*



# டி20 தி என்டர்டைனர்

ஐசிசி
தர வரிசை



| அணிகள் | | |
|---|---|---|
| 1 | இந்தியா | 271 |
| 2 | ஆஸ்திரேலியா | 262 |
| 3 | இங்கிலாந்து | 254 |
| 4 | நியூஸிலாந்து | 249 |
| 5 | வெஸ்ட் இண்டீஸ் | 246 |
| 6 | தென் ஆப்பிரிக்கா | 245 |
| 7 | இலங்கை | 235 |
| 8 | பாகிஸ்தான் | 229 |
| 9 | ஆப்கானிஸ்தான் | 223 |
| 10 | பங்களாதேஷ் | 220 |

| பந்து வீச்சாளர் | | |
|---|---|---|
| ஜேக்கப் டஃப்பி | நியூஸி | 723 |
| அக்கேல் ஹோசைன் | வெ இ | 707 |
| வருண் சக்ரவர்த்தி | இந்தி | 706 |
| அடில் ரஷீத் | இங்கி | 705 |
| வானிந்து ஹசரங்க | இலங் | 700 |
| ஆடம் ஸாம்பா | ஆஸி | 694 |
| ரவி பிஷ்னாய் | இந்தி | 674 |
| மகீஷ் தீக்ஷானா | இலங் | 666 |
| ரஷீத்கான் | ஆப்கா | 664 |
| அர்ஸதீப் சிங் | இந்தி | 653 |






| பேட்ஸ்மேன் | | | |
|---|---|---|---|
| 1 | டிராவிஸ் ஹெட் | ஆஸி | 856 |
| 2 | அபிஷேக் சர்மா | இந்தி | 829 |
| 3 | பில் சால்ட் | இங்கி | 815 |
| 4 | திலக் வர்மா | இந்தி | 804 |
| 5 | சூர்யகுமார் | இந்தி | 739 |
| 6 | ஜாஸ் பட்லர் | இங்கி | 735 |
| 7 | பதும் நிஸ்சங்க | இலங் | 714 |
| 8 | டிம் செய்பெர்ட் | நியூஸி | 708 |
| 9 | பாபர் அசாம் | பாக் | 681 |
| 10 | குஷால் பெரேரா | இலங் | 676 |
| | ரீசா ஹென்ரிக்ஸ் | தெ ஆ | 676 |

| ஆல் ரவுண்டர் | | |
|---|---|---|
| ஹர்திக் பாண்ட்யா | இந்தி | 252 |
| மார்க்கஸ் ஸ்டோய்னிஸ் | ஆஸி | 210 |
| லியாம் லிவிங்ஸ்டன் | இங்கி | 209 |
| திபேந்திர சிங் ஏரீ | நேபாள் | 209 |
| முகமது நபி | ஆப்கா | 207 |
| வானிந்து ஹசரங்க | இலங் | 205 |
| சிக்கந்தர் ரசா | ஜிம் | 194 |
| ரோமரியோ ஷெப்பர்ட் | வெ இ | 194 |
| ராஸ்டன் சேஸ் | வெ இ | 186 |
| கெர்ஹார்ட் யராஸ்மஸ் | நமி | 165 |

# மும்பை இந்தியன்ஸ்

- விஜய் (@adi10vj)

**ஏலம்:**

2022ல் நடந்த மெகா ஆக்சன் தான் MI-ல் நடந்த மிகப்பெரிய குழப்பத்திற்குக் காரணமாகிப் போனது. எப்போதும் தனது கோர் வீரர்களைத் தீர்மானித்துவிட்டு அதைச் சுற்றியே மற்ற வீரர்களை ஏலத்தில் அதிக விலை கொடுத்து வாங்குவார்கள். அந்த நாள் வரை அதுதான் அணியின் வெற்றிச்சமன்பாடாக இருந்தது. அன்று ஆகாஷ் எடுத்த நிறைய தவறான முடிவுகள் 3 வருடங்கள் அணியைக் கடுமையான பாதையில் பயணிக்க வைத்தது. குறிப்பாக உலகத்தர வேகப்பந்து வீச்சாளர் இருக்கும்போது அவரைத் தலைமையாகக் கொண்ட மற்ற பந்துவீச்சாளர்கள் அமைய வேண்டும். ஆனால் ஆர்ச்சர், டேன் சாம், மெரிடித் போன்ற வெளிநாட்டு வீரர்களை நம்பிக் கோட்டைவிட்டார்.

ஆனால் இந்த முறை ஏலத்துக்கு நல்ல திட்டத்தோடு உள்ளே வந்தார். இறுதி ஓவர்களைப் போட பும்ரா இருக்கிறார். ஆனால் பவர்பிளேவில் பந்துவீச சரியான வீரர் இல்லாமல் 3 சீசன்கள் திணறியது. தீபக் சாகர் மற்றும் போல்ட் போன்ற வீரர்களை அணிக்கு சேர்த்ததின் மூலம் அதை சரிசெய்தார்கள்.

ஹோம் பிட்சுக்கு ஏற்ற வீரர்களை எடுப்பது தான் எந்த ஒரு அணியின் முதன்மையான திட்டமாக இருக்கும். அதன்படி சுழற்பந்துக்கு வான்கடே மைதானம் பெரிய அளவில் கைகொடுக்காது. அதனால் அதில் பெரிய முதலீடு செய்யாமல் இந்திய இளம்வீரரைக் கேரளா லோக்கல் மேட்சில் அடையாளம் கண்டு பயிற்சிக்குத் தென்னாப்பிரிக்காவில் நடைபெற்ற SA20இல் நெட்பவுலராக அனுப்பி அங்கு ரஷீத்கானிடம் பயிற்சி பெற வைத்த இளம் வீரர் தான் விக்னேஷ் புத்துர். அவருடன் முஜீப், கரண் ஷர்மா கைகோர்க்க அந்தக் குழுவும் தன்னிறைவு பெற்றது.



இஷான் போனபின்பு அந்த இடத்திற்கானத் தேர்வாக SA20இல் MI கேப்டவுன் அணிக்காக ஆடிய வீரரை 1 கோடிக்கு எடுத்துக் கலக்கியது. சான்ட்னருக்காகப் போவார்கள் எனத் துளியும் நினைக்காத போது அவரையும் இரண்டு கோடிக்கு எடுத்தது.

**அணியின் கட்டமைப்பு:**

பும்ரா இல்லாத ஆரம்பகட்ட ஆட்டங்களில் மும்பையின் பந்துவீச்சு தடுமாறியதும் உண்மை. பலம் வாய்ந்த போல்ட் இருந்தாலும், இந்திய மைதானத்தைக் கவனமாகக் கையாள பும்ரா மாதிரியான வீரரின் தலைமை முக்கியம் என்பது இதன்மூலம் மீண்டும் ஒருமுறை நிரூபணம் ஆகியது.

இந்தமுறை இளம் வீரர்களான, குறிப்பாக இந்திய இளம் வீரர்கள் புத்துர், அஸ்வனி, நமன் தீரின் ஆட்டம் வியக்கவைத்தது. நேகல் வாதோராவை விட்டு நமன் தீரை RTM செய்தது தவறான முடிவோ என நினைத்தபோது, நமன் தீர் பினிஷிங்குகளில் அடித்த ஒவ்வொரு சிக்சரும் என் யூகத்தைத் தவறு எனப் புரியவைத்தது.



கடந்த மூன்று சீசன்களில் விழுந்த பலத்த அடிக்குக் காரணமாய் நான் நினைப்பது, அணியில் நிலவிய குழப்பம். யாருக்குக் கீழ் ஆடுவது, யாரைத் தலைவராக எண்ணுவது போன்ற குழப்பமான மனநிலை, ரசிகர்களிடையே நிலவிய அதிருப்தி எல்லாம் சேர்ந்து களத்திலும் பிரதிபலித்தது. சரியான விளையாடும் 11 பேரைத் தீர்மானிக்க முடியாமல் திணறியது போன்ற காரணங்களை எளிதாகக் கூறிவிட முடியும்.

வில் ஜாக்ஸ், பவோன் ஜேக்கப், டாப்லி முதலானோரின் வருகையும் மாற்று வீரராக வந்த கார்டின் போஸ் அவர்களின் இணைப்பும் ஒரு தரமான கோர் டீமைக் கட்டமைக்க வழிவகுத்தது. அணித்தேர்வைப் பொறுத்தவரை நூற்றுக்கு நூறு மதிப்பெண் இம்முறை மும்பைக்குக் கொடுக்கலாம்.

**2025 ஆட்டங்கள் பார்வை:**

2025இல் மதயானை பலத்துடன் களம் இறங்கியது மும்பை. அதுவும் முதல் ஆட்டமே சமபலம் வாய்ந்த சி எஸ் கே உடன். எனக்கு நேரில் பார்க்க வாய்ப்புக் கிடைத்தது. மிகுந்த ஆர்வத்துடன் உள்ளே நுழைந்தால் முதல் இடி பும்ரா இல்லை என்பதுதான். முதல் ஓவரில் ரோஹித் 0 வில் ஆட்டமிழப்பு அணிக்கு நெருக்கடியைக் கொடுத்திருக்கும். அடுத்தடுத்து எளிதாக தங்கள் விக்கெட்டுகளைப் பறிகொடுத்தார்கள். சாஹர் மட்டும் ஓரளவு நன்றாக ஆடி நல்லதொரு டார்கெட்டைப் பதிவு செய்தார். எதிர்பார்த்தது போலவே மும்பை முதல் ஆட்டத்தில் தோல்வி. இது அடுத்தடுத்த ஆட்டங்களிலும் தொடர்கதை ஆனது.

**பும்ரா வருகையும் மும்பை எழுச்சியும்**:

முதல் 5 ஆட்டங்களில் கொல்கத்தாவுக்கு எதிராக வெற்றி பெற்றாலும் அடுத்தடுத்த ஆட்டங்களில் இலக்குக்கு அருகில் சென்று தோல்வி அடைந்தது மும்பை ரசிகர்களுக்குக் கவலையைக் கொடுத்தது.

இந்த சீரியசில் முக்கியத் திருப்புமுனையாக அமைந்த ஆட்டம் மும்பை வான்கடேவில் ஆர் சி பி க்கு எதிரான ஆட்டம். 221 ரன்களை இலக்காகக் கொடுத்தது பெங்களூரு அணி. இதை எப்படியும் சேஸ் செய்யமுடியாமல் தோற்கத்தான் போகிறது என அனைவரும் நினைத்தோம். முடிவும் அவ்வாறே தான் இருந்தது. ஆனால் மும்பை வீரர்கள் இலக்கை நோக்கி முன்னேறிச் சென்றதைப் பார்க்கும்போது கண்டிப்பாக வெற்றிபெற்றுவிடலாம் என்ற உத்வேகத்தைத் தந்தது. குறிப்பாக ஹர்திக்கினுடைய ஆட்டம் எல்லாரையும் ஆச்சர்யப்பட வைத்தது. இறுதியாக 12 ரன்கள் வித்தியாசத்தில் தோற்றாலும் இது வெற்றிகரமான தோல்வியாகவே ரசிகர்கள் ஏற்றுக்கொண்டனர்.




இந்த சீஸனின் அடுத்த முக்கியமான ஆட்டம் டெல்லியில் நடந்த 29வது போட்டி. 205 ரன்களை இலக்காக டெல்லிக்கு மும்பை நிர்ணயித்தது. கிரிக்கெட்டே எனக்கு மீண்டும் ஒரு வாய்ப்பு கொடு எனக் கேட்டு அதற்காக உழைத்த கருண் நாயர், முதல்

பந்திலேயே அந்த அணி ஒரு விக்கெட்டை இழந்தபோதிலும் அதைப் பொருட்படுத்தாமல் ஆக்ரோஷமாக ஆடினார். இந்த ஆட்டம், அவ்ளோ தான் கருண் ஒற்றை ஆளாய் வெற்றியைப் பறித்துவிட்டார், என நினைக்கும்போது ரோஹித்துக்குப் பதிலாக இம்பாக்ட் பிளேயராக உள்ளே வந்தார் கர்ண் ஷர்மா.

முதல் ஓவரிலேயே போரல் விக்கெட் அவர் எடுக்க, அடுத்த ஓவரில் சான்ட்னர் வீசிய அந்த ஸ்லோ பால் கருண் நாயரின் ஸ்டெம்பைத் தாக்கி டெல்லி ரசிகர்களின் இதயத்தை உடைத்தது. பின்னர் வந்த பேட்ஸ்மேன்கள் மும்பை சுழலை சமாளிக்க முடியாமலும், நேர்த்தியான வேகப்பந்து வீச்சாலும் தொடர்ச்சியாக விக்கெட்டுகளை இழந்தனர். வெளியில் இருந்து ரோஹித் ஆலோசனைகள் கொடுக்க, ஹர்திக் அதை நடைமுறைப்படுத்த, மற்றவர்கள் ஒத்துழைக்க, 100% டீம் ஒர்க் எப்படி ஒரு அணியை வலுப்படுத்தும் என்பதை செய்து காட்டி வெற்றிபெற்றார்கள்.




அதற்குமுன் மும்பை எங்கு தோற்றது என்பதை இந்த ஒரு ஆட்டம் புரியவைத்தது. இந்த ஒரு ஆட்டம் தான் மும்பையின் எழுச்சிக்குக் காரணமாய் அமைந்தது. அதன்பின் இதை எல்லா ஆட்டங்களிலும் செயல்படுத்த, இப்போது தொடர் வெற்றிகளுடன் வலம்வருகிறது மும்பை அணி. பிளே-ஆப்க்கான போட்டியில் முன்னணியில் உள்ளார்கள் இப்போது. இனிவரும் ஆட்டங்களில் இதனைத் தொடர்ந்து, கோப்பையை வெல்லும் முனைப்புடன் விளையாடுவார்கள் என்ற நம்பிக்கையுடன் இந்தக் கட்டுரையை நிறைவு செய்கிறேன்.

# சகோதரக் கிரிக்கெட்





**அமெலியா கெர்** **ஜெஸ் கெர்**

| | | |
|---|---|---|
| வலதுகை பேட்டர் | **பேட்டிங்** | வலதுகை பேட்டர் |
| லெக் ஸ்பின் | **பந்துவீச்சு** | வலதுகை மித வேகப்பந்து |
| 165 | **போட்டிகள்** | 80 |
| 3620 | **ரன்கள்** | 434 |
| 194 | **விக்கெட்டுகள்** | 75 |
| 15 | **அரை சதங்கள்** | - |
| 4 | **சதங்கள்** | - |
| 13 | **ஆட்டநாயகன்** | 3 |
| ஒருநாள் போட்டிகளில் இரட்டை சதமடித்த இளம் வீராங்கனை. | **சாதனை** | 2024 டி20 உலகக்கோப்பை வென்ற அணியில் இவரும் ஒருவர். |
| **சிறப்பு** - இவர்கள் இருவரும் பள்ளி ஆசிரியைகள். அமெலியா சிறப்பு குழந்தைகளுக்கான ஆசிரியை | | |
| இவர்கள் அப்பா, அம்மா இருவரும் உள்ளூர் போட்டிகளில் ஆடியுள்ளனர். தாத்தா ப்ருஸ் முர்ரே, நியூசிலாந்து அணிக்காக டெஸ்ட் போட்டிகளில் ஆடியுள்ளார். | | |

# ராஜஸ்தான் ராயல்ஸ்

*- சு. பழனி செல்வகுமார்*

ராஜஸ்தான் ராயல்ஸ் அணி கேப்டன் சஞ்சு சாம்சன், துவக்க வீரர் ஜெஸ்வால், துருவ் ஜூரல், ரியான் பராக், ஹெட்மேர் ஆகியோரைத் தக்க வைத்தது. அன்கேப்டு (புதிய விதிமுறை) வீரர் என்ற அடிப்படையில் சந்தீப் சர்மாவைத் தக்க வைத்தது.

அணி சமநிலைக்காக பின் வரும் வீரர்களை ஏலத்தில் எடுத்தது.

டிரெண்ட் பவுல்ட் → ஜோப்ரா ஆர்ச்சர்

சகால் → ஹசரங்க

அஸ்வின் → தீக்சானா

நன்றே பர்க்கர் → பரூக்கி

ஆவேஸ் கான் → தேஷ்பாண்டே

**அணியின் பலம் மற்றும் பலவீனம்**

கேப்டன் சாம்சனைத் தக்க வைத்தது. நிறைய அணிகள் கேப்டனை மாற்றிய போதும் ராஜஸ்தான் தக்க வைத்தது. ஜெய்ஸ்வால் துவக்க வீரராக இருந்தது இன்னொரு பலம்.

பலவீனம் என்றால் அதிரடி ஆட்டக்காரர் பட்லரைத் தக்க வைக்காமல், ஹைட்மேரைத் தக்கவைத்தது, பட்லருக்கு மாற்றாக எடுக்கப்பட்ட நித்திஷ் ராணாவும் பெரிய அளவில் ஆடவில்லை.

**ஆடும் 11**

சஞ்சு சாம்சன் காயம் காரணமாக, முதல் மூன்று போட்டிகளில் கேப்டனாக செயல்பட்டார் பராக். சஞ்சு இம்பாக்ட் வீரராகக் களம் இறங்கினார். போட்டி நடுவே சஞ்சு மீண்டும் காயமடைந்தார். ஆனால் சஞ்சுவின் காயம், 14 வயது சூர்யவன்சிக்கு ஐபிஎல் வாய்ப்பு வழங்கியது. இந்திய வேகப்பந்து வீச்சாளர்கள் யாரும் சிறப்பான முறையில் அமையவில்லை. சந்தீப் சர்மாவின் வேகம் குறைந்த பந்தும் எடுபடவில்லை.



சரி வெளிநாட்டு வேகப்பந்து வீச்சாளர்கள் இருந்தார்களே என்றால் முதல் போட்டியிலே அதிக ரன்கள் கொடுத்து சாதனை படைத்தார் ஆர்ச்சர். பரூக்கி பந்து வீசினார் அவ்வளவே.

இலங்கையின் சுழற்பந்து வீச்சாளர்கள் இருவர் இருந்தும் ஒரு போட்டியில் மட்டுமே காப்பாற்றினர். ஜெய்ஸ்வால் மற்றும் சூர்யவன்சி தந்த சிறப்பான துவக்கத்தைப் பின்னால் வந்த வீரர்கள் பயன்படுத்தவில்லை. துருவ் ஜூரல் மெதுவாக ஆடிக் கடைசி நேரத்தில் வேகத்தைக் கூட்டினார். ஆனால் அணிக்குப் பயனேதும் இல்லை.




ஹெட்மேர் அணியில் இருந்தார். சுபம் துபே கடைசி பேட்டராக இறங்கி முடித்து வைக்க வேண்டிய போட்டிகளில் சொதப்பினார். ஜெயஸ்வால் நன்றாக ஆடினாலும் ஒரு கட்டத்தில் அணி எவ்வளவு மோசமாக ஆடினாலும், எனது பங்கு 50 ரன்கள் என்று கிளம்பி விடுகிறாரோ என்று தோன்றியது.

பராக் மைதானத்தில் காட்டும் ஆக்ரோசத்தில் பாதியை ஆட்டத்தில் காட்டி இருக்கலாம். ஆனால் சில போட்டிகளை நெருக்கிக் கொண்டு வந்தார். இறுதிக்கட்ட வீரர்கள் தங்களது பணியை செய்யாததால் தோற்றுப் போனது.

**<u>கேப்டன்சி</u>**

கேப்டன்சியைப் பொறுத்தவரை சென்னை அணி கடைசி என்றால், கடைசிக்கு முந்திய இடம் ராஜஸ்தானுக்கு. சில போட்டிகள் பராக், சில போட்டிகள் சாம்சன் என மாறி மாறி வந்தது பெரிய அளவில் தாக்கத்தை ஏற்படுத்தியது.

ஹசரங்கவைத் தவறான இடத்தில் பேட்டிங் இறக்கியது மோசமான வியூகம். போட்டியில் சிறப்பாக வீசிய ஆர்ச்சரை விட்டுவிட்டு சூப்பர் ஓவர் வீச சந்தீப்பை அழைத்தது இன்னொரு மோசமான வியூகம். சூப்பர் ஓவரில் இரண்டு ரன் அவுட்கள் போட்டி பற்றியத் தெளிவின்மையைக் காட்டியது.

வைபவ் சூர்யவன்சி இந்த ஆண்டில் சிறப்பான தேர்வு. கவீனா மபாகாவுக்குக் கூடுதல் வாய்ப்பு கொடுத்திருக்கலாம்.

பேட்டிங் ஓரளவுக்கு ஒகே என்றாலும் பந்துவீச்சு படு மோசம் என்பதால் ராஜஸ்தான் அணி அடுத்த சுற்றுக்குத் தகுதி பெறவில்லை.




**அதிக ரன்கள் அடித்த வீரர்கள்**

யெஜெஸ்வி ஜெய்ஸ்வால் - 559 ரன்கள் (6 அரை சதங்கள்)

ரியான் பராக் - 393 ரன்கள் (1 அரைசதம்)

**அதிக விக்கெட்டுகள் எடுத்த வீரர்கள்**

வானிந்து ஹசரங்க - 11 விக்கெட்டுகள்

ஜோப்ரா ஆர்ச்சர் - 11 விக்கெட்டுகள்

மகீஷ் தீக்சானா - 11 விக்கெட்டுகள்

*மும்பை அணிக்கு எதிரான போட்டியில் ராஜஸ்தான் அணி இளஞ்சிவப்பு நிற ஆடை அணிந்து விளையாடியது. இது ராஜஸ்தான் கிராமப்புற மகளிர் மேம்பாட்டுக்காக. இந்தப் போட்டியில் அடிக்கப்பட்ட ஒவ்வொரு சிக்ஸருக்கும் ஆறு வீடுகளுக்கு சூரிய மின்சார வசதி செய்து தரப்பட்டது.*




| தமிழ்நாடு பிரிமியர் லீக் 2025 | | | |
|---|---|---|---|
| **தேதி** | **ஆடும் அணிகள்** | | **மைதானம்** |
| ஜூன் 5 | திண்டுக்கல் டிராகன்ஸ் | லைகா கோவை கிங்ஸ் | கோயம்புத்தூர் |
| ஜூன் 6 | ஐட்ரீம் திருப்பூர் தமிழன்ஸ் | சேப்பாக் சூப்பர் கில்லீஸ் | கோயம்புத்தூர் |
| ஜூன் 7 | நெல்லை ராயல் கிங்ஸ் | திருச்சி கிராண்ட் சோழாஸ் | கோயம்புத்தூர் |
| ஜூன் 8 | சீசெம் மதுரை பேந்தர்ஸ் | எஸ்கேஎம் சேலம் ஸ்பார்டன்ஸ் | கோயம்புத்தூர் |
| ஜூன் 8 | ஐட்ரீம் திருப்பூர் தமிழன்ஸ் | திண்டுக்கல் டிராகன்ஸ் | கோயம்புத்தூர் |
| ஜூன் 9 | சேப்பாக் சூப்பர் கில்லீஸ் | நெல்லை ராயல் கிங்ஸ் | கோயம்புத்தூர் |
| ஜூன் 10 | எஸ்கேஎம் சேலம் ஸ்பார்டன்ஸ் | திருச்சி கிராண்ட் சோழாஸ் | கோயம்புத்தூர் |
| ஜூன் 11 | லைகா கோவை கிங்ஸ் | சீசெம் மதுரை பேந்தர்ஸ் | கோயம்புத்தூர் |
| ஜூன் 13 | ஐட்ரீம் திருப்பூர் தமிழன்ஸ் | எஸ்கேஎம் சேலம் ஸ்பார்டன்ஸ் | சேலம் |
| ஜூன் 14 | சேப்பாக் சூப்பர் கில்லீஸ் | லைகா கோவை கிங்ஸ் | சேலம் |
| ஜூன் 14 | திண்டுக்கல் டிராகன்ஸ் | சீசெம் மதுரை பேந்தர்ஸ் | சேலம் |
| ஜூன் 15 | திருச்சி கிராண்ட் சோழாஸ் | ஐட்ரீம் திருப்பூர் தமிழன்ஸ் | சேலம் |
| ஜூன் 15 | நெல்லை ராயல் கிங்ஸ் | எஸ்கேஎம் சேலம் ஸ்பார்டன்ஸ் | சேலம் |
| ஜூன் 16 | திண்டுக்கல் டிராகன்ஸ் | சேப்பாக் சூப்பர் கில்லீஸ் | சேலம் |
| ஜூன் 17 | திருச்சி கிராண்ட் சோழாஸ் | லைகா கோவை கிங்ஸ் | சேலம் |
| ஜூன் 18 | சீசெம் மதுரை பேந்தர்ஸ் | நெல்லை ராயல் கிங்ஸ் | சேலம் |
| ஜூன் 19 | எஸ்கேஎம் சேலம் ஸ்பார்டன்ஸ் | சேப்பாக் சூப்பர் கில்லீஸ் | சேலம் |
| ஜூன் 21 | லைகா கோவை கிங்ஸ் | நெல்லை ராயல் கிங்ஸ் | திருநெல்வேலி |
| ஜூன் 22 | எஸ்கேஎம் சேலம் ஸ்பார்டன்ஸ் | திண்டுக்கல் டிராகன்ஸ் | திருநெல்வேலி |
| ஜூன் 22 | சீசெம் மதுரை பேந்தர்ஸ் | ஐட்ரீம் திருப்பூர் தமிழன்ஸ் | திருநெல்வேலி |




| தமிழ்நாடு பிரிமியர் லீக் 2025 | | | |
|---|---|---|---|
| **தேதி** | **ஆடும் அணிகள்** | | **மைதானம்** |
| ஜூன் 23 | சேப்பாக் சூப்பர் கில்லீஸ் | திருச்சி கிராண்ட் சோழாஸ் | திருநெல்வேலி |
| ஜூன் 24 | லைகா கோவை கிங்ஸ் | ஐட்ரீம் திருப்பூர் தமிழன்ஸ் | திருநெல்வேலி |
| ஜூன் 25 | திருச்சி கிராண்ட் சோழாஸ் | சீசெம் மதுரை பேந்தர்ஸ் | திருநெல்வேலி |
| ஜூன் 26 | நெல்லை ராயல் கிங்ஸ் | திண்டுக்கல் டிராகன்ஸ் | திருநெல்வேலி |
| ஜூன் 28 | சேப்பாக் சூப்பர் கில்லீஸ் | சீசெம் மதுரை பேந்தர்ஸ் | திண்டுக்கல் |
| ஜூன் 28 | லைகா கோவை கிங்ஸ் | எஸ்கேஎம் சேலம் ஸ்பார்டன்ஸ் | திண்டுக்கல் |
| ஜூன் 29 | ஐட்ரீம் திருப்பூர் தமிழன்ஸ் | நெல்லை ராயல் கிங்ஸ் | திண்டுக்கல் |
| ஜூன் 29 | திண்டுக்கல் டிராகன்ஸ் | திருச்சி கிராண்ட் சோழாஸ் | திண்டுக்கல் |
| **ஜூலை 1** | **குவாலிபயர் 1** | | **திண்டுக்கல்** |
| **ஜூலை 2** | **எலிமினேட்டர்** | | **திண்டுக்கல்** |
| **ஜூலை 4** | **குவாலிபயர் 2** | | **திண்டுக்கல்** |
| **ஜூலை 6** | **இறுதிப் போட்டி** | | **திண்டுக்கல்** |

***ஷார்ட்ஸ்***

*தென்னாப்பிரிக்கா அணி வரும் அக்டோபர் மாதம் நமீபியா சென்று ஒரு சர்வதேச டி20 போட்டியில் ஆடவுள்ளது. நமீபியாவில் புதிய மைதானத் துவக்க விழாவை முன்னிட்டு இந்தப் போட்டி நடைபெற உள்ளது. இந்த மைதானத்தில் தான் 2027 உலகக் கோப்பைப் போட்டிகளில் சில நடைபெற உள்ளன. இதுவரை நமீபியாவில் போட்டி நடைபெற்ற மைதானங்கள் க்ளப் மைதானங்கள். நமீபியா கிரிக்கெட் வாரியத்திற்கு சொந்தமான மைதானமாகப் புது மைதானம் திகழும்.*

# உள்ளூராட்டம்

பொதுவாகக் கணித ஆசிரியர்கள் என்றாலே அதிக நேரம் கரும்பலகையில் செலவளிப்பவர்கள். அனைத்து மாணவர்களையும் தேர்வு பெற வைக்க வேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப்பட்டவர்கள். கணிதம் நன்றாக வந்தால் முழு மதிப்பெண் கிடைக்கும், வரவில்லை என்றால் கணக்கில் மட்டும் பெயிலு என்ற சொல்லோடு அலைபவர்கள் ஏராளம். இந்த அழுத்தம் எப்போதும் கணித ஆசிரியர்களுக்கு உண்டு.

இவ்வளவு அழுத்தத்திற்கு நடுவில் அரசுப் பள்ளி மற்றும் அரசு உதவிபெறும் பள்ளிகளில் பணிபுரியும் கணித ஆசிரியர்கள் ஒரு கிரிக்கெட் தொடரில் பங்கேற்றுள்ளனர். அந்தத் தொடர் பற்றிய தகவல்களைத் தருவதில் துடுப்பாட்டம் பேருவகை கொள்கிறது.

TN MTCL
TAMILNADU MATHEMATICS TEACHERS CRICKET LEAGUE
MADURAI 2025
மதுரை மாவட்ட கணித ஆசிரியர்கள் இணைந்து நடத்தும்
முதலாம் ஆண்டு மாநில அளவிலான
இருபால் கணித ஆசிரியர்களுக்கான
விளையாட்டுத் திருவிழா-2025
(அரசு மற்றும் அரசு உதவி பெறும் ஆசிரியர்கள் மட்டும்)
இடம் : மதுரை தேதி : மே மாதம் (9.5.25, 10.5.25 & 11.5.25, வெள்ளி,சனி&ஞாயிறு)
ஆண் ஆசிரியர்களுக்கான கிரிக்கெட் போட்டி
MATCH: 10 OVERS RUBBER BALL
WINNER பிரம்ம குப்தா Trophy
RUNNER ஆர்யபட்டா Trophy
THIRD பாஸ்கரா Trophy
FOURTH வராகமிகிரர் Trophy
பெண் ஆசிரியர்களுக்கான கிரிக்கெட் போட்டி
MATCH: 5 OVERS RUBBER BALL
WINNER சகுந்தலா தேவி Trophy
RUNNER T.A. சரஸ்வதி அம்மா Trophy
இருபால் கணிதஆசிரியர்களுக்கான
ATHLETICS MEET-2025
இருபால் ஆசிரியர்கள் கீழ்கண்ட ATHELETIC பிரிவுகளில் ஏதேனும் மூன்று பிரிவுகளில் மட்டும் பங்கு பெற வேண்டும்.
AGE CATEGORIES
31-35 36-40 41-45 46-50 51-55 55-60 என்ற பிரிவுகளில் பங்கேற்க வேண்டும்.
EVENTS
TRACK 100 M 200 M 400 M
FIELD LONG JUMP SHOT PUT DISCUS THROW
NO CHAMPIONSHIP
COMMON EVENT : 4x100 RELAY
Special Prizes
Man of the Match
Man of the Series (Ramanujam Shield)
Best Batsman
Best Bowler
Best Fielder
குறிப்பு: கண்டிப்பாக உங்களது அணிக்குரிய JERSEY-ல் வரவேண்டும்.
CHESS & VOLLEY BALL
அனைத்து வயதினரும் கலந்து கொள்ளக் கூடிய ஓர் பொதுவான விளையாட்டு போட்டிகள்
குறிப்பு: Chess விளையாடுபவர்கள் கண்டிப்பாக Chess Board&Coins கொண்டுவரவேண்டும்.
CO-ORDINATORS
C. தமிழ்குமரன் அல் அமின் மேல்நிலைப்பள்ளி Ph. 9894388999
D. பாண்டியன் GMGBHSS. பேரையூர். Ph. 6380390115
G. ராஜேஸ்குமார் GHSS. T.முள்ளிப்பள்ளம் Ph. 8807360573
D. விவேகி V.H.N. மேல்நிலைப்பள்ளி, மதுரை Ph. 9443484921
R. ஹேமா மேரி CHGHSS. Ph. 9543231010
K. பால்மாணிக்கம் சந்திரகுமார் A.C. மேல்நிலைப்பள்ளி Ph. 9994080709
S. செந்தில் குமார் GHSS. வெள்ளையம்பட்டி. Ph. 7010397223
K.R.P. நித்யாதேவி G.G.H.S.S. கருங்காலக்குடி Ph. 9677721962
S. திலீப்குமார் GHSS. அய்யங்கோட்டை Ph. 8940142794
V. விஜய் பாபு GHSS, M.சுப்பலாபுரம்

கணித ஆசிரியர்கள் கிரிக்கெட் தொடர் மே 10, 11 தேதிகளில் அமெரிக்கன் கல்லூரி மைதானத்தில் நடைபெற்றது. இதில் எட்டு அணிகள் பங்கேற்றன. ஏ & பி என இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. ஒரு பிரிவில் உள்ள அணி மற்ற அணிகளுடன் ஒரு போட்டியில் மோதின. ஒவ்வொரு பிரிவிலும் முதல் இரண்டு இடங்களைப் பிடித்த அணிகள் அரையிறுதிப் போட்டியில் ஆடின.

## அரையிறுதிப் போட்டிகள்

திருச்சி, கடலூர், புதுக்கோட்டை மற்றும் மதுரை அணிகள் அரையிறுதிக்குத் தகுதி பெற்றன. கடலூர், புதுக்கோட்டை அணிகள் முதல் அரையிறுதியில், புதுக்கோட்டை அணி வென்று இறுதிப் போட்டிக்கு சென்றது.

மதுரை, திருச்சி அணிகள் ஆடிய இரண்டாவது அரையிறுதிப் போட்டியில் திருச்சி அணி வென்று இறுதிப் போட்டிக்கு சென்றது.

## இறுதிப் போட்டி




இறுதிப் போட்டியானது 8 ஓவர்களைக் கொண்ட போட்டியாக நடந்தது. முதலில் பேட்டிங் செய்த திருச்சி அணியின் டேவிட், அபாரமாக ஆடி 8 சிக்ஸர்கள் உட்பட 63 ரன்களைக் குவித்தார். 8 ஓவர்கள் முடிவில் திருச்சி 111 ரன்களைக் குவித்தது. அதை சேசிங் செய்த புதுக்கோட்டை அணியினரும் மிகச் சிறப்பாக ஆடினர், சிவாவின் அரைசதத்தால் புதுக்கோட்டை அணி 111 ரன்களை எடுத்ததன் மூலம் ஆட்டம் டையில் முடிந்தது.

பின்பு சூப்பர் ஓவர் நடைபெற்றது. அதில் முதலில் பேட்டிங் செய்த புதுக்கோட்டை அணியினர் 10 ரன்களை அடித்தனர். இரண்டாவது பேட்டிங் செய்த திருச்சி அணி 5 பந்துகளில் 11 ரன்கள் எடுத்து வெற்றி பெற்று சாம்பியன் பட்டத்தை வென்றது.

சிறந்த மட்டை வீச்சாளர், தொடர் நாயகன் மற்றும் Most Valuable Player ஆகிய விருதுகளை திருச்சி அணியின் டேவிட் தட்டிச் சென்றார்.




*துடுப்பாட்டம் இதழுக்காகத் தகவல்களைப் பகிர்ந்தவர், திருச்சி அணியின் கேப்டன் நரசிம்மன் அவர்கள்.*

# குஜராத் டைட்டன்ஸ்

- கா. இராமச்சந்திரன் (@Rama_Chandran_K)

ஒரு பிரபலமான தொடரில் புதுவரவுகள் ஜொலிப்பது அரிதே. குஜராத் எனும் பெயர் அதற்கு விதிவிலக்கு போல. குஜராத் எனப் பெயர் கொண்ட அணிகள் முதல் தொடரிலேயே ஐபிஎல்-ல் அபாரமாக விளையாடியுள்ளன.

2022ல் அறிமுகமாகி அதே ஆண்டு கோப்பையை வென்று 2023ல் இறுதிப்போட்டி வரை வந்த வரலாற்றுச் சிறப்புமிக்க குஜராத் டைட்டன்ஸ் அணி சென்ற ஆண்டு முதல், கில் தலைமையில் விளையாடி வருகிறது. கில், ரஷீத் கான், சாய் சுதர்ஷன், சாருக்கான், ராகுல் திவாட்டியா போன்ற வீரர்களைத் தக்கவைத்துக்கொண்டு பெரிய ஏலத்திற்கு சென்றது.

தங்களின் தேவை என்ன என்று தெளிவுடன் ஏலத்தில் செயல்பட்டனர். ரஷீத் கண்டிப்பாக ஆடும் 11 ல் இடம் பெறுவார் என்பதால் வேகப்பந்து வீச்சாளர்களுக்கு பிரமாதமான முக்கியத்துவம் கொடுத்து ககிசோ ரபடாவுடன், சிராஜ், பிரசித், இஷாந்த் என இந்திய வேகப்பந்து வீச்சாளர்களை எடுத்து, சாய் கிஷோர், வாஷிங்டன் சுந்தர் என சுழற்பந்தையும் வலுப்படுத்தி, பட்லரையும் வசப்படுத்தியது அணி நிர்வாகத்தின் தெளிவை வெளிப்படுத்தி மீண்டும் ஒரு வலுவான அணியைக் கட்டமைப்பதை உறுதி செய்தனர்.



தமிழக ரசிகர்களுக்குக் குஜராத் டைட்டன்ஸ் அணி மீது கூடுதல் ஈர்ப்பு ஏற்படக் காரணம் அந்த அணியில் இருந்த தமிழக வீரர்கள் சுதர்ஷன், கிஷோர், வாஷிங்டன், சாருக்கான் ஆகிய நால்வருமே ஆடும் 12 ல் இடம்பெற்றிருந்தனர். சிறப்பான பங்களிப்பையும் அளித்தனர்.

குஜராத்தின் ஆடும் பதினொன்றில் சலனமே இல்லாமல் தேர்வு செய்யும் வழியில் அணியின் தொடக்கம் இருந்தது. பெரும்பாலான ஆட்டங்களில் முதல் மூன்று பேட்ஸ்மேன்களான சுதர்ஷன், கில் மற்றும் பட்லர் இவர்களில் ஒருவர் 17 ஓவர்கள் வரை விளையாடினார்கள் அது அணிக்கு மிகப்பெரிய பலமாக இருந்தது.

பந்துவீச்சில் இந்தத் தொடரில் அதிக டாட் பால் வீசிய பட்டியலில் முதல் இடத்தை சிராஜும், ஊதா தொப்பியை அதிக விக்கெட்டுகள் வீழ்த்தி பிரசித் கிருஷ்ணாவும், அதிக ரன்களை விலாசி ஆரஞ்சுத் தொப்பியை சாய் சுதர்ஷன் வசப்படுத்த, சாய் கிஷோர் தன் பங்கிற்கு 19 விக்கெட்களை வீழ்த்த இப்படி அணியில் அனைவரும் தங்களுக்கான பணியைச் சிறப்பாக செய்து முதல் அணியாக பிளே-ஆப் சுற்றுக்குத் தகுதியடைந்தது.

இந்தத் தொடரில் சிறப்பாக செயல்பட குஜராத் அணிக்கு **"முதல் மூன்று"** காரணங்கள் என்னவாக இருக்கும் என்று யோசிக்கும் போது உடனே மனதில் தோன்றிய பதில் "**முதல் மூன்று**" தான்.




**ஆமாம் 759.... 650... 538 இது தான் முறையே சாய் சுதர்ஷன், சுப்மான் கில் மற்றும் ஜாஸ் பட்லர் இந்தத் தொடரில் அடித்த ரன்கள். அதே போல் பந்து வீச்சிலும் 25...19...16... என பிரசித் கிருஷ்ணா, சாய் கிஷோர், சிராஜ் கூட்டணி விக்கெட்களை வீழ்த்தி அசத்தியுள்ளது.**

மும்பை போன்ற அணிகள் நிதானமாகத் தொடங்கி, தொடரின் பின் பாதியில் வேகம் கூட்டி கோப்பையை வெல்ல முனைப்பு காட்டுவர். பெரும்பாலான அணித் தலைவர்கள் தங்களது அணி அடுத்த சுற்றுக்குத் தகுதியடைந்த பின்பு சொல்லும் ஒரு வரி "we want to

continue this momentum". அங்கு தான் குஜராத் தவற விட்டதுனு சொல்லலாம். பிளே-ஆப் சுற்றுக்குத் தகுதியடைந்த பின்பு வரிசையாக லக்னோ மற்றும் சென்னையுடன் இரண்டு தோல்விகள். இது அவர்களது நம்பிக்கையைச் சிதைத்துவிட்டது. இதன் விளைவு தான் முதல் இரண்டு இடம் கிடைக்காமல் எலிமினேட்டரில் விளையாடிய காரணம். அங்கும் பிரதான பந்துவீச்சாளர்களின் பந்துவீச்சு எடுபடாமல் போக, கோப்பையை நெருங்க முடியாமல் போய்விட்டது.

அணியின் தலைவரான சுப்மான் கில் தனது தலைமைப் பண்பை சோதிக்கும் அளவிற்கு ஆட்டங்கள் எதுவும் பெரிதாக அமையவில்லை என்பது தான் நிதர்சனம்.

மர்மமான சுழற்பந்து வீச்சாளர், பேட்ஸ்மேன்களுக்கு சிம்ம சொப்பனமான ரஷீத் கான் இந்தத் தொடரில் சிறப்பாக பங்களிக்காதது குஜராத் அணிக்கு ஏமாற்றம் தான். பிளே-ஆப்பில் ஜாஸ் பட்லர் இல்லாதது பெரும் இழப்பு தான்.

**இந்தத் தொடரில் குஜராத் கதாநாயகன் என்று ஒருவரைத் தேர்ந்தெடுத்தல் எளிது அல்ல பேட்டிங்கிலும், பந்து வீச்சிலும் மும்மூர்த்திகளாகத் திகழ்ந்த**

**சாய் சுதர்ஷன் , சுப்மான் கில் & ஜாஸ் பட்லர்**

**பிரசித் கிருஷ்ணா, சாய் கிஷோர் & முகமது சிராஜ்**

**இவர்களே இந்தத் தொடரில் குஜராத்தின் நாயகர்கள்.**




ஒரு நாள் குஜராத்தின் நாளாக அமையவில்லை மற்றபடி பெரிய சறுக்கல்கள் எதுவும் இல்லை. இந்த அணி சிறப்பாக இருக்கிறது இதே நம்பிக்கையுடன் அடுத்த ஆண்டும் களத்தில் கலக்கலான ஆட்டத்தை வெளிப்படுத்துவார்கள் என நம்பப்படுகிறது.

# இம்பாக்ட் ப்ளேயர்

*வினோத் காம்ப்ளி* - வினோத் காம்ப்ளி என்றதும் சட்டென்று நினைவுக்கு வருவது சச்சின் டெண்டுல்கர் நண்பர் என்பது. வினோத் காம்ப்ளி இடதுகை பேட்ஸ்மேன் மும்பை அணிக்காகவும், தென்னாப்பிரிக்காவின் போலன்ட் மாகாண அணிக்காகவும் ஆடியுள்ளார்.



சச்சினின் பள்ளி நண்பரான வினோத் காம்ப்ளி, சச்சினுடன் இணைந்து செயின்ட் சேவியர் பள்ளிக்கு எதிரான போட்டியில் 664 ரன்கள் அடித்தார். பயிற்சியாளர் டிக்ளேர் செய்ததால் இந்த இணை 664 ரன்களோடு நின்றது குறிப்பிடத்தக்கது.

வினோத் காம்ப்ளி, ரஞ்சிப் போட்டியில் களம் இறங்கி முதல் பந்திலே சிக்ஸ் அடித்துத் துவங்கியவர். ஒருநாள் போட்டிகளில் பிறந்தநாள் அன்று சதமடித்த முதல் வீரர் வினோத் காம்ப்ளி தான்.

வினோத் காம்ப்ளி, டெஸ்ட் போட்டிகளில் சராசரி 54 வைத்திருந்தார். அவர் ஆடிய 3வது டெஸ்ட் போட்டியில் இங்கிலாந்துக்கு எதிராக 224 ரன்கள் அடித்தார். அதற்கு அடுத்த டெஸ்டில் ஜிம்பாப்வேக்கு எதிராக 227 ரன்கள் அடித்தார். அடுத்து நடந்த இலங்கை தொடரில் 125 & 120 என இரண்டு சதங்கள் அடித்தார். தான் ஆடிய முதல் பத்து டெஸ்ட் போட்டிகளில் 4 சதங்கள், 3 அரை சதங்கள் அடித்தார். அதில் இரண்டு இரட்டை சதங்கள்.

ஆனால் வினோத் காம்ப்ளி இரண்டாவது இன்னிங்ஸில் பெரிதாக ஆடவில்லை. அவரது முதல் இன்னிங்ஸ் சராசரி 69.13, இரண்டாவது இன்னிங்ஸ் சராசரி 9.4 என்பது குறிப்பிடத்தக்கது.

1992 மற்றும் 1996 உலகக் கோப்பையில் ஆடியவர் வினோத் காம்ப்ளி. 1996 உலகக் கோப்பையில் ஜிம்பாப்வே அணிக்கு எதிரான போட்டியில் சதமடித்தார். இலங்கைக்கு எதிரான அரையிறுதிப் போட்டி ரசிகர்கள் கிளர்ச்சியால் முடிவுக்கு வந்த போது காம்ப்ளி கண்ணீர் வடித்தது ரசிகர்களுக்குத் தெரியும்.

அவர் கடைசியாக ஆடிய டெஸ்ட் போட்டியின் போது அவருக்கு வயது 23. ஒரு நாள் போட்டியின் போது வயது 28. கங்குலி, டிராவிட் வருகை இவருக்கான இடத்தைப் பறித்தது டெஸ்டில். யுவராஜ், சேவாக் வருகை ஒருநாள் போட்டியில் இவரை உள்ளே சேர்க்க விடவில்லை.

கிரிக்கெட்டில் இருந்து ஓய்வு பெற்ற வினோத் காம்ப்ளி, 2009ல் கேல் பாரதி கிரிக்கெட் அகாடமி என்ற கிரிக்கெட் பயிற்சி நிறுவனத்தை ஆரம்பித்தார். பிக் பாஸ் சீசன் 3ல் வைல்ட் கார்டு என்டரியாக பங்கேற்றார். தேர்தலில் போட்டியிட்டுத் தோல்வியை தழுவினார்.

வினோத் காம்ப்ளி சில திரைப்படங்களில் நடித்துள்ளார். சில தொலைக்காட்சி நிகழ்ச்சிகளிலும் பங்கேற்றுள்ளார். இவரது வாழ்க்கையை "வினோத் காம்ப்ளி - தி லாஸ்ட் ஹீரோ (Vinod Kambli - The last hero)" என்ற புத்தகமாக எழுதியுள்ளார் குனால் புரந்தாரே.

வினோத் காம்ப்ளி, ஒருமுறை காரில் சென்ற போது நடு வழியில் காரை நிறுத்தினார். அப்போது ஒரு காவலர் அவரை மீட்டு மருத்துவமனையில் சேர்த்தார். மாரடைப்புக்கு சிகிச்சை பெற்றார். சமீபத்தில் அவரது உடல்நிலை குறித்து சமூக ஊடகங்களில் செய்திகள் வெளியாகின.



எவ்வளவு பெரிய வீரர் என்றாலும் அணிக்குத் தேவைப்படும் நேரத்தில் தேவையான ஆட்டத்தை வெளிப்படுத்தத் தவறினால் என்னாகும் என்பதற்கு வினோத் காம்ப்ளி ஒரு சிறந்த உதாரணம்.

# சாதனைத் துளிகள்

## டெஸ்ட் போட்டிகளில் ஒரு இன்னிங்ஸில் அதிக ரன்கள் குவித்த வீரர்கள்

| வரிசை எண் | வீரர் | அணி | எதிரணி | ரன்கள் | தேதி | மைதானம் |
|---|---|---|---|---|---|---|
| 1 | பிரையன் லாரா | வெஸ்ட் இண்டீஸ் | இங்கிலாந்து | 400* | 10-ஏப்ரல்-04 | ஆன்டிகுவா |
| 2 | மேத்யூ ஹேடன் | ஆஸ்திரேலியா | ஜிம்பாப்வே | 380 | 09-அக்டோ-03 | பெர்த் |
| 3 | பிரையன் லாரா | வெஸ்ட் இண்டீஸ் | இங்கிலாந்து | 375 | 16-ஏப்ரல்-94 | ஆன்டிகுவா |
| 4 | மகேளா ஜெயவர்த்தனே | இலங்கை | தென் ஆப்பிரிக்கா | 374 | 27-ஜூலை-06 | கொழும்பு |
| 5 | கேரி சோபர்ஸ் | வெஸ்ட் இண்டீஸ் | பாகிஸ்தான் | 365* | 26-பிப்ர-58 | கிங்ஸ்டன் |
| 6 | லியோனாட் ஹட்டன் | இங்கிலாந்து | ஆஸ்திரேலியா | 364 | 20-ஆகஸ்ட்-38 | ஓவல் |
| 7 | சனத் ஜயசூரிய | இலங்கை | இந்தியா | 340 | 02-ஆகஸ்ட்-97 | கொழும்பு |
| 8 | ஹனீப் முகமது | பாகிஸ்தான் | வெஸ்ட் இண்டீஸ் | 337 | 17-ஜனவரி-58 | பர்படாஸ் |
| 9 | வாலி ஹம்மோன்ட் | இங்கிலாந்து | நியூஸிலாந்து | 336* | 31-மார்ச்-33 | ஆக்லாந்து |
| 10 | டேவிட் வார்னர் | ஆஸ்திரேலியா | பாகிஸ்தான் | 335* | 29-நவம்பர்-19 | அடிலெய்டு |

# ஆயன் அப்சல் கான்

ஆயன் அப்சல் கான், எமிரேட்ஸ் அணி வீரர். 19 வயதான இவர் கோவாவில் பிறந்தவர். இவரது குடும்பம் ஷார்ஜாவில் குடியேறிவிட்டது.

எமிரேட்ஸ் சர்வதேச அணியிலும், U19 அணியிலும் மாறி மாறிப் பங்கேற்றவர் ஆயன் அப்சல் கான். ஆயன், இடதுகை சுழற்பந்து வீச்சாளர். ஓரளவுக்கு பேட்டிங்கும் ஆடக் கூடியவர்.



ஆயன் தனது அறிமுக ஒருநாள் போட்டியில் நான்கு விக்கெட்டுகளை வீழ்த்தி ஆட்டநாயகன் ஆனவர். நேபாள் அணிக்கு எதிரான அந்தப் போட்டியில் 14 ரன்கள் கொடுத்து 4 விக்கெட்டுகளை வீழ்த்தினார் ஆயன்.

ஒருநாள் போட்டிகளில் 3 முறை ஆட்டநாயகன் விருது பெற்றுள்ள ஆயன், சர்வதேச டி20 போட்டிகளில் 4 முறை ஆட்டநாயகன் விருது பெற்றுள்ளார். எமிரேட்ஸ் அணி நியூசிலாந்து அணியை வீழ்த்திய வரலாற்றுச் சிறப்புமிக்க டி20 போட்டியில் ஆட்டநாயகன் ஆயன் அப்சல் கான் தான்.

தற்போது எமிரேட்ஸ் அணி உலகக் கோப்பை லீக் 2 தொடரின் பகுதியாக ஸ்காட்லாந்து மற்றும் நெதர்லாந்து அணியுடன் ஒருநாள் போட்டியில் ஆடி வருகிறது. அந்தத் தொடரில் ஆயன் தனது 50வது ஒருநாள் போட்டி விக்கெட்டை வீழ்த்தினார்.

19 வயதான ஆயன் அப்சல் கான் மேலும் பல சாதனைகளைக் குவிக்க, துடுப்பாட்டம் குழுவின் வாழ்த்துகள்!

# ராயல் சேலஞ்சர்ஸ் பெங்களூரு

- *சு. பழனி செல்வகுமார்*

பெங்களூரு அணி ஏலத்திற்கு முன்பாக விராட் கோலி, ரஜத் படிடார் மற்றும் யாஷ் தயாள் என மூவரை மட்டுமே தக்கவைத்தது. ஏலத்தில் சிறப்பாக பங்கேற்றது பெங்களூரு. பெங்களூரு மைதானம் சிறப்பான பேட்டிங் மைதானம் என்பதால் சுழற்பந்து வீச்சாளருக்கு அதிக ஆர்வம் காட்டாமல் வேகப்பந்து வீச்சாளர்களை வளைத்தது.

ஹேசல்வுட், புவனேஷ், ராசிக் சலாம் ஆகியோரை அதிக விலையிலும், துஸார, நிகிடி, ஷெப்பர்ட் ஆகியோரைக் குறைந்த விலையிலும் தூக்கியது. சால்ட், ஜித்தேஷ் ஆகியோர் பேட்டிங்கை வலுவாக்கினர். ஆல்ரவுண்டர் கேட்டகிரியில் லிவிங்ஸ்டன், பெத்தேல், குரனால் ஆகியோரை எடுத்தது. சுழற்பந்து வீச்சாளராக சுயாஷ் சர்மாவை எடுத்தது. இது போக சில இளம் வீரர்களை எடுத்து வைத்தது.

பெங்களூரு அணிக்கு இந்த ஆண்டு கோலிக்கு பொருத்தமானத துவக்க வீரர் துணையாக பில் சால்ட் கிடைத்தார். படிடார், படிக்கல், டேவிட், குர்னால் என பேட்டிங் நீண்டது. ஜித்தேஷ்க்கு சில வாய்ப்புகளே கிடைத்தன. பந்துவீச்சில் ஹேசில்வுட், புவனேஷ்வர் துல்லிய தாக்குதல் நடத்தினர். சுயாஷ் சுழற்பந்தில் திருப்புமுனை நிகழ்த்தினார். பாண்ட்யாவின் பவுண்சர்கள் ஆத்தாடி ரகம்.




ஒரு சிறப்பான அணி அமைந்ததும், அணியை சிறப்பாக வழி நடத்தினார் படிடார். தொடர்ந்து சொதப்பிய லிவிங்ஸ்டனுக்குப் பதிலாக, ஷெப்பர்ட்டைக் களம் இறக்கினார் கை மேல் பலன். முதலில் சில போட்டிகளை பெங்களூருவில் தோற்றாலும், பின்பு வெற்றி பெறும் சூத்திரத்தைக் கற்றுக் கொண்டது பெங்களூரு அணி. பந்துவீச்சோ, பேட்டிங்கோ சொதப்பினால் மொத்தமாக சொதப்பும் பெங்களூரு அணி. அது பழைய பெங்களூரு அணி, இந்த அணி எங்கே சறுக்கினாலும்

மீண்டு வர தெரிந்த அணி. அதுக்கு கடைசி லீக் போட்டியே சாட்சி. 227 ரன்களை சேஸ் செய்தது பெங்களூரு அணி.

சொந்த அணிக்குத் திரும்ப வேண்டி இருந்ததால் ஹேசல்வுட் ப்ளே ஆஃப் சுற்று ஆட மாட்டார் என சொல்லப்பட்டது. பிளசிங் முசாராபானி அணியில் சேர்க்கப்பட்டார். ஆனால் ஹேசல்வுட் தொடர்ந்து ஆடினார். ஆர்சிபியும் கோப்பையை வென்றது.



விக்கெட் போனால் அடுத்த பேட்டர்கள் சமாளித்து ஆடியதால் பெங்களூரு அணி சீரான முன்னேற்றப் பாதையில் சென்றது. பந்துவீச்சைப் பொறுத்தவரை பெங்களூரு கோப்பையை வெல்லக் காரணமே கட்டுக்கோப்பான பந்துவீச்சு தான்.




**ஆர்சிபி பற்றி வேறென்ன சொல்ல, கோப்பை அவர்கள் கையில் இருக்கையில்!**

# முத்தரப்புத் தொடர்

ஆண்கள் கிரிக்கெட்டில் முத்தரப்புத் தொடர்கள் நடந்த காலம், கிரிக்கெட்டின் பொற்காலம் என்றே சொல்லலாம். அந்த அளவுக்கு விறுவிறுப்பான போட்டிகள் நடந்தது.

தற்போது இலங்கை, இந்தியா, தென்னாப்பிரிக்கா மகளிர் அணிகள் மோதிய முத்தரப்பு ஒருநாள் தொடர் இலங்கையில் நடைபெற்றது.

முதல் போட்டி ஏப்ரல் 27ம் தேதி நடைபெற்றது. இலங்கை - இந்தியா அணிகள் மோதின. மழை காரணமாக 39 ஓவர்களாக குறைக்கப்பட்டது. முதலில் பேட் செய்த இலங்கை 147 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. அதிகபட்சமாக ஹாசினி பெரீரா 30 ரன்கள் அடித்தார். ஸ்நே ராணா 3 விக்கெட்டுகளையும், ஸ்ரீ சரணி மற்றும் தீப்தி சர்மா தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

இந்தியா 9 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் எளிதாக வென்றது. 50 ரன்கள் அடித்து ஆட்டமிழக்காமல் இருந்த **பிரதிகா ராவல் ஆட்டநாயகி** ஆனார்.




ஏப்ரல் 29ல் நடைபெற்ற இரண்டாவது போட்டியில் இந்தியா - தென்னாப்பிரிக்கா அணிகள் பங்கேற்றன. இந்தியா முதலில் பேட்டிங் செய்தது. பிரதிகா ராவல் அரைசதத்தால் (78) 6 விக்கெட்டுகள் இழப்பிற்கு 276 ரன்களைக் குவித்தது. நாங்குலுலேயா லபா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.



சேசிங்கில் தென்னாப்பிரிக்க அணியின் டாஸ்மின் பிரிட்ஸ் (109) சதமடித்தார். ஆனாலும் தென்னாப்பிரிக்கா இலக்கை எட்டவில்லை. 5 விக்கெட்டுகள் வீழ்த்தி 15 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றிபெற வைத்த **ஸ்நே ராணா ஆட்டநாயகி** ஆனார்.

மே 2ல் நடைபெற்ற 3வது போட்டியில் இலங்கை, தென்னாப்பிரிக்கா அணிகள் மோதின. அனிரீ டெர்க்சென் (61*) அரைசதம் அடிக்க தென்னாப்பிரிக்கா 235 ரன்களை எடுத்தது. இலங்கையின் மல்கி மதர 4 விக்கெட்டுகளையும் டெவ்மி விஹங்க 3 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

சேசிங்கில் கவிஷா தில்ஹாரி (61) அரைசதம் அடித்தார். 77 ரன்களைக் குவித்த **ஹர்ஷிதா சமரவிக்ரம ஆட்டநாயகி** ஆனார். நாங்குலுலேயா லபா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார். இலங்கை 5 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது.




மே 4ல் நடைபெற்ற 4வது போட்டியில் மீண்டும் இந்தியா, இலங்கை அணிகள் மோதின. ரிச்சா கோஷ் (58) அரைசதத்தால் இந்தியா 275 ரன்களை எட்டியது. சமாரி அட்டபட்டு மற்றும் சுகந்திகா குமாரி தலா 3 விக்கெட்டுகளை வீழ்த்தினர்.

இலங்கை அணியின் நிலக்ஷிகா சில்வா (56), ஹர்ஷிதா சமரவிக்ரம (53) அரைசதம் அடிக்க 3 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது. ஸ்நே ராணா 3 விக்கெட்டுகளை வீழ்த்தினார். **நிலக்ஷிகா சில்வா ஆட்டநாயகி** ஆனார்.



மே 7ல் நடைபெற்ற போட்டியில் இந்தியா, தென்னாப்பிரிக்கா அணிகள் மீண்டும் மோதின. இந்தியா சிறப்பாக பேட்டிங் செய்தது. ஜெமீமா ரோடிக்ஸ் 123 ரன்களைக் குவித்தார். தீப்தி சர்மா 7 ரன்களில் சதத்தைத் தவறவிட்டார். மந்தனா தனது பங்காக 51 ரன்கள் அடித்தார். இந்தியா 9 விக்கெட்டுகள் இழப்பிற்கு 337 ரன்களைக் குவித்தது. மசபடா க்ளாஸ், நடினே கிளார்க் & லபா தலா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினர்.

தென்னாப்பிரிக்காவின் அனிரீ டெர்க்சென் (81) மற்றும் சோலே டிரையான் (67) அரைசதம் அடித்தனர். தென்னாப்பிரிக்கா 23 ரன்கள் வித்தியாசத்தில் தோற்றது. அமன்ஜோத் கவுர் 3 விக்கெட்டுகளையும் தீப்தி சர்மா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர். **ஆட்ட நாயகி ஜெமீமா ரோடிக்ஸ்.**



மே 9ல் நடைபெற்ற கடைசி லீக் போட்டியில் இலங்கை தென்னாப்பிரிக்கா அணிகள் மோதின. அனிரீ டெர்க்சென் (104) சதம், சோலே டிரையான் (74) அரை சதம் அடிக்க தென்னாப்பிரிக்கா 315 ரன்கள் எடுத்தது. டெவ்மி விஹங்க 5 விக்கெட்டுகளைக் கைப்பற்றினார். சமாரி அட்டபட்டு 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.




இலங்கை 239 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. சமாரி அட்டபட்டு 52 ரன்கள் அடித்தார். **சோலே டிரையான் 5 விக்கெட்டுகளை வீழ்த்தி ஆட்டநாயகி** ஆனார். அயபோங்க

காகா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார். தென்னாப்பிரிக்கா 76 ரன்கள் வித்தியாசத்தில் ஆறுதல் வெற்றி பெற்றது.

**இறுதிப் போட்டி**

இலங்கை, இந்திய அணிகள் பங்கேற்ற இறுதிப் போட்டி மே 11ல் நடைபெற்றது. இந்தப் போட்டியிலும் இந்திய அணி முதலில் பேட்டிங் செய்தது. ஸ்மிருதி மந்தனா (116) சதமடித்தார். இந்தியா 7 விக்கெட்டுகள் இழப்பிற்கு 342 ரன்களைக் குவித்தது. டெவ்மி விஹங்க & சுகந்திகா குமாரி தலா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினர்.

இமாலய இலக்கைத் துரத்திய இலங்கை அணி 245 ரன்களுக்கு சுருண்டது. சமாரி அட்டபட்டு 51 ரன்களும், நில்கஷிகா சில்வா 48 ரன்களும் அடித்தனர். ஸ்நே ராணா 4 விக்கெட்டுகளையும், அமன்ஜோத் கவுர் 3 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர். இந்திய அணி 97 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது. **ஆட்ட நாயகி ஸ்மிருதி மந்தனா. தொடர் நாயகி ஸ்நே ராணா.**




**அதிக ரன்கள் அடித்த வீராங்கனைகள்**

அனிரீ டெர்க்சென் – 276 ரன்கள்

ஸ்மிருதி மந்தனா – 264 ரன்கள்

ஜெமீமா ரோடிக்ஸ் – 245 ரன்கள்

ஹர்ஷிதா சமரவிக்ரம – 203 ரன்கள்

சோலே டிரையான் – 194 ரன்கள்

பிரதிகா ராவல் – 194 ரன்கள்




<u>**அதிக விக்கெட்டுகள் எடுத்த வீராங்கனைகள்**</u>

ஸ்நே ராணா – 15 விக்கெட்டுகள்

டெவ்மி விஹங்க – 11 விக்கெட்டுகள்

அமன்ஜோத் கவுர் – 6 விக்கெட்டுகள்

சோலே டிரையான் – 6 விக்கெட்டுகள்

நாங்குலுலேயா லபா – 6 விக்கெட்டுகள்



| டெஸ்ட் போட்டி முடிவுகள் | | | | | |
|---|---|---|---|---|---|
| **ஆடிய அணிகள்** | | **மைதானம்** | **தேதி** | **வென்ற அணி** | **ஆட்டநாயகன்** |
| இங்கிலாந்து | ஜிம்பாப்வே | நாட்டிங்காம் | மே 22-26 | இங்கிலாந்து | சோயப் பஷீர் |
| 565/6 டிக் | 265 & 255 | | | இன்னிங்ஸ் & 45 ரன்கள் | 3/62 & 6/81 |

| டி20 போட்டி முடிவுகள்* | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆடிய அணிகள் | | மைதானம் | தேதி | வென்ற அணி | ஆட்டநாயகன் |
| பங்களாதேஷ் | எமிரேட்ஸ் | ஷார்ஜா | மே 17 | பங்களாதேஷ் | பர்வீஸ் ஹொசைன் இமான் |
| 191/7 | 164 | | | 29 ரன்கள் | 100 |
| பங்களாதேஷ் | எமிரேட்ஸ் | ஷார்ஜா | மே 19 | எமிரேட்ஸ் | முகமது வசீம் |
| 205/5 | 206/8 | | | 2 விக்கெட் | 82 |
| பங்களாதேஷ் | எமிரேட்ஸ் | ஷார்ஜா | மே 21 | எமிரேட்ஸ் | அலிஷன் ஷராபு |
| 162/9 | 166/3 | | | 7 விக்கெட் | 68* |
| பாகிஸ்தான் | பங்களாதேஷ் | லாகூர் | மே 28 | பாகிஸ்தான் | சதாப் கான் |
| 201/7 | 164 | | | 37 ரன்கள் | 48, 2/26 & 2கேட்ச் |
| பாகிஸ்தான் | பங்களாதேஷ் | லாகூர் | மே 30 | பாகிஸ்தான் | ஷாகிப்ஸடா பர்ஹான் |
| 201/6 | 144 | | | 57 ரன்கள் | 74 |

*முக்கிய அணிகளின் போட்டி மட்டுமே தரப்பட்டுள்ளது

| ஒரு நாள் போட்டி முடிவுகள் | | | | | |
|---|---|---|---|---|---|
| **ஆடிய அணிகள்** | | **மைதானம்** | **தேதி** | **வென்ற அணி** | **ஆட்டநாயகன்** |
| எமிரேட்ஸ் | ஸ்காட்லாந்து | ஆம்ஸ்டெல்வீன் | மே 04 | ஸ்காட்லாந்து | ஜார்ஜ் முன்சே |
| 225/9 | 226/7 | | | 6 விக்கெட் | 78 |
| நெதர்லாந்து | எமிரேட்ஸ் | ஆம்ஸ்டெல்வீன் | மே 06 | நெதர்லாந்து | ஸ்காட் எட்வர்ட்ஸ் |
| 272/7 | 159 | | | 113 ரன்கள் | 74 & 2 கேட்ச் |
| எமிரேட்ஸ் | ஸ்காட்லாந்து | ஆம்ஸ்டெல்வீன் | மே 08 | எமிரேட்ஸ் | ராகுல் சோப்ரா |
| 296/6 | 199 | | | 97 ரன்கள் | 101 |
| நெதர்லாந்து | ஸ்காட்லாந்து | ஆம்ஸ்டெல்வீன் | மே 10 | நெதர்லாந்து | பால் வான் மீக்கீரன் |
| 282/7 | 263/9 | | | 19 ரன்கள் | 3/39 |
| எமிரேட்ஸ் | நெதர்லாந்து | யூட்ரெக்ட் | மே 12 | நெதர்லாந்து | கைல் கெலின் |
| 204/9 | 205/5 | | | 5 விக்கெட் | 4/44 |
| எமிரேட்ஸ் | ஸ்காட்லாந்து | யூட்ரெக்ட் | மே 14 | ஸ்காட்லாந்து | பிரண்டன் மெக்முலன் |
| 161 | 162/2 | | | 8 விக்கெட் | 3/48 & 50* |
| ஸ்காட்லாந்து | நெதர்லாந்து | யூட்ரெக்ட் | மே 16 | ஸ்காட்லாந்து | பிரண்டன் மெக்முலன் |
| 380/9 | 235 | | | 145 ரன்கள் | 101 & 4/55 |
| அமெரிக்கா | கனடா | லாடர்ஹில் | மே 17 | அமெரிக்கா | ஸ்மிட் பட்டேல் |
| 361/3 | 192 | | | 169 ரன்கள் | 152* |
| ஓமன் | கனடா | லாடர்ஹில் | மே 19 | ஓமன் | முகமது நதீம் |
| 217/6 | 202 | | | 15 ரன்கள் | 76* & 2 கேட்ச் |

| ஒரு நாள் போட்டி முடிவுகள் | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆடிய அணிகள் | | மைதானம் | தேதி | வென்ற அணி | ஆட்டநாயகன் |
| அயர்லாந்து | வெஸ்ட் இண்டீஸ் | டப்லின் | மே 21 | அயர்லாந்து | ஆண்டி பால்பெர்னி |
| 303/6 | 179 | | | 124 ரன்கள் | 112 |
| ஓமன் | அமெரிக்கா | லாடர்ஹில் | மே 21 | ஓமன் | ஜாதிண்டேர் சிங் |
| 266 | 266/9 | | | சூப்பர் ஓவர் | 100 |
| வெஸ்ட் இண்டீஸ் | அயர்லாந்து | டப்லின் | மே 23 | முடிவு இல்லை | |
| 352/8 | - | | | | |
| கனடா | ஓமன் | லாடர்ஹில் | மே 23 | ஓமன் | - |
| 212 | 108/3 | | | 18 ரன்கள்# | - |
| வெஸ்ட் இண்டீஸ் | அயர்லாந்து | டப்லின் | மே 25 | வெஸ்ட் இண்டீஸ் | கேசி கார்ட்டி |
| 385/7 | 165 | | | 197 ரன்கள்# | 170 |
| அமெரிக்கா | கனடா | லாடர்ஹில் | மே 25 | அமெரிக்கா | சஹாயன் ஜஹாங்கிர் |
| 286/9 | 198 | | | 88 ரன்கள் | 89 |
| அமெரிக்கா | ஓமன் | லாடர்ஹில் | மே 27 | அமெரிக்கா | ஹர்மீட் சிங் |
| 293/8 | 284/9 | | | 9 ரன்கள் | 33 & 3/69 |
| இங்கிலாந்து | வெஸ்ட் இண்டீஸ் | பிர்மிங்கம் | மே 29 | இங்கிலாந்து | ஜேக்கப் பெத்தேல் |
| 400/8 | 162 | | | 238 ரன்கள் | 82 & 1/18 |

# விராட் கோலி

ரோகித் சர்மாவைத் தொடர்ந்து, விராட் கோலியும் டெஸ்ட் போட்டிகளில் இருந்து ஓய்வு பெற்றுள்ளார். இது இந்திய அணியில் மாபெரும் வெற்றிடத்தை ஏற்படுத்தியுள்ளது.

நல்ல உடற்தகுதி, நல்ல பார்ம் இருந்தும் விராட் கோலி ஓய்வு பெற்றது பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது. டெஸ்ட் கிரிக்கெட்டைப் பொறுத்தவரை இந்திய அணியில் 4வது பேட்ஸ்மேனாகக் களம் இறங்கி அந்த இடத்தைக் கட்டிக்காத்தவர் சச்சின் டெண்டுல்கர். சச்சின் டெண்டுல்கர் ஓய்வுக்குப் பிறகு அந்த இடத்தை வலுவாகப் பிடித்துக் கொண்டார் விராட்.

டெஸ்ட் போட்டிகளில் உலகம் போற்றும் நான்கு வீரர்களில் ஒருவரான விராட் கோலி 10000 ரன்களை எட்டாமல், பேர்வெல் டெஸ்ட் இல்லாமல் ஓய்வு பெற்றுள்ளார்.

டெஸ்ட் போட்டிகளில் இந்திய அணியின் ஆகச் சிறந்த கேப்டன் விராட் கோலி. அவரது சாதனைகள்

*1. டெஸ்ட் போட்டிகளில் அதிக ரன்கள் அடித்த இந்தியக் கேப்டன் - 5864 ரன்கள்.*

*2. அதிகப் போட்டிகள் வென்ற இந்தியக் கேப்டன் 68 போட்டிகளில் 40 வெற்றி.*

*3. அதிக இரட்டை சதங்கள் அடித்த கேப்டன் - 7 இரட்டை சதங்கள்*

*4. ஆஸ்திரேலியாவில் தொடரை வென்ற முதல் ஆசியக் கேப்டன் - பார்டர் கவாஸ்கர் தொடர் 2018 - 2019*

டெஸ்ட் போட்டிகளில் 123 போட்டிகளில் 210 இன்னிங்ஸ்களில் 9230 ரன்களைக் குவித்துள்ளார் விராட் கோலி. 30 சதங்கள், 31 அரைசதங்கள் இதில் அடக்கம்.



விராட் கோலி 10 போட்டிகளில் ஆட்டநாயகன் விருது வென்றுள்ளார். 3 தொடர்களில் தொடர் நாயகன் விருது பெற்றுள்ளார் விராட் கோலி.




ரசிகர்களின் மனதில் நீங்கா இடம் பெற்ற விராட் கோலியின் டெஸ்ட் இடத்தைப் பிடிக்கப் போவது யார் என்று தெரியவில்லை. விராட் கோலிக்குத் துடுப்பாட்டம் குழுவின் வாழ்த்துக்கள்.

## ஷார்ட்ஸ்

*சாய் சுதர்சன், இந்த ஆண்டுக்கான வளர்ந்து வரும் வீரர் விருதைப் பெற்றார். 2022 முதல் ஐபிஎல் போட்டிகளில் ஆடினாலும் இந்த ஆண்டு தொடர் துவங்கும் முன்பு அவர் 25 போட்டிகளில் மட்டுமே ஆடி இருந்ததால் இந்த விருதுக்குத் தகுதி பெற்றார். (25க்குக் கூடுதல் போட்டி ஆடியவர்கள் இந்த விருதுப் பட்டியலில் வர முடியாது).*



# <u>பாகிஸ்தான் சூப்பர் லீக்</u>

பாகிஸ்தான் சூப்பர் லீக் போட்டிகள் ஏப்ரல் 11ல் தொடங்கியது. 6 அணிகள் பங்கேற்றன.

**<u>அணிகள் / கேப்டன்</u>**

லாகூர் கலந்தார்ஸ் - ஷாகீன் அப்ரீடி

இஸ்லாமாபாத் யுனைடெட் - சதாப் கான்

குவெட்டா கிளாடியேட்டர்ஸ் - சவுத் ஷகீல்

பெஷாவர் ஸால்மி - பாபர் அசாம்

முல்தான் சுல்தான்ஸ் - முகமது ரிஸ்வான்

கராச்சி கிங்ஸ் - டேவிட் வார்னர்




<u>ஜேம்ஸ் வின்ஸ் அதிரடி</u>

ஏப்ரல் 12ல் கராச்சியில் நடைபெற்ற போட்டியில் முல்தான் மற்றும் கராச்சி அணிகள் மோதின. கேப்டன் ரிஸ்வான் சதம் (105) மூலம் முல்தான் அணி 234 ரன்களைக் குவித்தது. சேஸ் செய்த கராச்சி அணியின் ஜேம்ஸ் வின்ஸ் 43 பந்துகளில் 101 ரன்கள் அடிக்க சேஸ் செய்தது. ஜேம்ஸ் வின்ஸ் 14 போர்களும் 4 சிக்ஸர்களும் அடித்தார்.

இதுதான் இந்தத் தொடரில் அதிக பட்ச சேஸ் ஆகும்.

<u>சிகரம் தொட்ட இஸ்லாமாபாத்</u>

மே 19ல் நடைபெற்ற போட்டியில் இஸ்லாமாபாத் யுனைடெட் அணி, கராச்சி கிங்ஸ் அணிக்கு எதிராக 251 ரன்கள் எடுத்தது. அலெக்ஸ் ஹேல்ஸ் 88, சாகிப்ஸடா பர்ஹான் 73 ரன்கள் அடித்தனர். இந்த ஆண்டு பாகிஸ்தான் சூப்பர் லீக்கில் அடிக்கப்பட்ட அதிகபட்ச ரன்கள் இது.

<u>பட்டையை கிளப்பிய பர்ஹான்</u>

ஏப்ரல் 14ல் பெஷாவர் அணிக்கு எதிரான போட்டியில் இஸ்லாமாபாத் அணி 5 விக்கெட் இழப்பிற்கு 243 ரன்கள் அடித்தது. இஸ்லாமாபாத் அணியின் ஷாகிப்ஸடா பர்ஹான் 106 ரன்கள் அடித்தார். இந்த ஆண்டில் அடிக்கப்பட்ட அதிகபட்ச ரன் இது.

<u>பதுங்கிய முல்தான், பாய்ந்த குவெட்டா</u>

ஏப்ரல் 29 நடைபெற்ற குவெட்டா அணிக்கு எதிரான போட்டியில் முல்தான் அணி 89 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. கேப்டன் ரிஸ்வான் 44 ரன்கள் அடித்து ஆட்டமிழக்காமல்

இருந்தார். குவெட்டா அணியின் குர்ரம் ஷஷாத் 4 விக்கெட்டுகளையும், முகமது வாசிம் மற்றும் பஹீம் அஸ்ரப் தலா2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.



<u>அசத்திய அஸ்ரப்</u>

ஏப்ரல் 27ல் நடைபெற்ற பெஷாவர் அணிக்கு எதிரான போட்டியில் குவெட்டா அணியின் பஹீம் அஸ்ரப் 5 விக்கெட்டுகளை வீழ்த்தினார். பெஷாவர் அணியின் சைம் அயூப், முகமது ஹாரிஸ், அப்துல் சமாத், லூக் வுட், சுபியன் முக்கிம் ஆகியோர் பஹீம் அஸ்ரப் பந்து வீச்சில் வீழ்ந்தனர்.

<u>**குவாலிபயர் 1 - மே 21, லாகூர்**</u>

*குவெட்டா கிளாடியேட்டர்ஸ் - 209/6*

தினேஷ் சந்திமால் - 48*

பென் தார்சுவிஸ் - 2/31

*இஸ்லாமாபாத் யுனைடெட் - 179*

சாகிப்ஸடா பர்ஹான் - 52

உஸ்மான் தாரிக் - 3/32

***குவெட்டா கிளாடியேட்டர்ஸ் 30 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்ட நாயகன் - பஹீம் அஸ்ரப் - 45 & 2/33

<u>**எலிமினேட்டர் - மே 22, லாகூர்**</u>

*கராச்சி கிங்ஸ் - 190/8*

டேவிட் வார்னர் - 75

ஹாரிஸ் ரஃப் - 3/35

*லாகூர் கலந்தார்ஸ் - 191/4*

அப்துல்லா ஷபீக் - 65

ஹசன் அலி - 2/37

***லாகூர் கலந்தார்ஸ் 6 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்ட நாயகன் - அப்துல்லா ஷபீக் - 65

**<u>குவாலிபயர் 2 - மே 23, லாகூர்</u>**

*லாகூர் கலந்தார்ஸ் - 202/8*

குஷால் பெரீரா -61

டைமல் மில்ஸ் -3/42

*இஸ்லாமாபாத் யுனைடெட் - 107*

சல்மான் அகா -33

ஷாகின் அப்ரீடி - 3/3

***லாகூர் கலந்தார்ஸ் 95 ரன்கள் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்ட நாயகன் - சல்மான் மிஸ்ரா - 3/16

**<u>இறுதிப் போட்டி - மே 25, லாகூர்</u>**

*குவெட்டா கிளாடியேட்டர்ஸ் - 201/9*

ஹசன் நவாஸ் - 76

ஷாகீன் அப்ரீடி - 3/24

*லாகூர் கலந்தார்ஸ் - 204/4*

குஷால் பெரீரா -62*

அப்ரார் அகமது - 1/27

***லாகூர் கலந்தார்ஸ் 6 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வெற்றி***

ஆட்ட நாயகன் - குஷால் பெரீரா - 62*

தொடர் நாயகன் - ஹசன் நவாஸ் -399 ரன்கள்




**<u>அதிக ரன்கள் அடித்த வீரர்கள்</u>**




ஷாகிப்ஸடா பர்ஹான் – 449 ரன்கள்

பக்கர் ஸமான் – 439 ரன்கள்

ஹசன் நவாஸ் – 399 ரன்கள்

அப்துல்லா ஷபீக் – 390 ரன்கள்

ஜேம்ஸ் வின்ஸ் – 378 ரன்கள்

**அதிக விக்கெட்டுகள் எடுத்த வீரர்கள்**



அப்ரார் அகமது – 17 விக்கெட்டுகள்

பஹீம் அஸ்ரப் – 17 விக்கெட்டுகள்

முகமது ஆமிர் – 13 விக்கெட்டுகள்

குர்ரம் ஷஷாத் – 12 விக்கெட்டுகள்

உஸ்மான் தாரிக் – 10 விக்கெட்டுகள்

***ஷார்ட்ஸ்***

*பாகிஸ்தானில் டி20 தொடரில் ஆடுவதற்கு முன்பாக பங்களாதேஷ் அணி எமிரேட்ஸ் அணியுடன் டி20 தொடரில் ஆடியது. முதல் போட்டியில் வென்ற பங்களாதேஷ் அணி, இரண்டாவது போட்டியில் தோற்றது. பிறகு கூடுதலாக ஒரு போட்டி, தொடரில் சேர்க்கப்பட்டது. அந்தப் போட்டியிலும் பங்களாதேஷ் அணி தோற்றுத் தொடரை இழந்தது. அமெரிக்கா மற்றும் எமிரேட்ஸ் அணியுடன் டி20 தொடரை இழந்த டெஸ்ட் விளையாடும் அணி பங்களாதேஷ்.*

# 18வது ஐபிஎல்-ம் பரிதாபமான சிஎஸ்கேவும்

- பொன் இளங்கோ (@ilango_pon)

**ஏலம்**

சுற்றுலா செல்லும் 6 மாதங்களுக்கு முன் தொடங்கும் திட்டமிடல் தான் சுற்றுலாவை விட இனிமையானது. அதுபோலத் தான் ஐபிஎல் போட்டிகளின் ஏலமும். இந்த ஆண்டு ஐபிஎல் ஏலம் 2024 நவம்பரில் நடைபெற்றபோது சிஎஸ்கே அணி நிர்வாகம் போல அதில் ஆர்வமுடன் வெளியிலிருந்து பங்கேற்ற அதன் ரசிகர்களுக்குத் தெரியாது இந்த ஏலத்தின் பாதிப்பு.

120 கோடி கையிருப்பில் 65 கோடி பழைய வீரர்களைத் தக்கவைக்கவும் 4 கோடி RTM-க்கும் சென்றது ஒரு பின்னடைவு. ஐபிஎல் போன்ற ஆட்டத்தொடர்களில் அறிவு முதலிடத்தையும் மன உணர்வுகள், சென்டிமென்டுகள் இறுதி இடத்தையும் எடுக்க வேண்டும். ஆனால் சிஎஸ்கே சென்றது நோஸ்டால்ஜியா பக்கம், அதுவே பாதிப்பாக அமைந்தது.

சிஎஸ்கே பாரம்பரியமாக இளைஞர்கள் மற்றும் தமிழ்நாட்டு வீரர்கள் மீது அதிகம் நம்பிக்கை வைக்காத அணி,ஆரம்ப காலம் தவிர. அப்படித் தவறவிட்ட ஒரு புதையல் தான் சாய் சுதர்சன். பள்ளிகளுக்கான ஜூனியர் சூப்பர் கிங்ஸ் மூலம் தெரிய வந்த வீரர். 20 லட்சம் அடிப்படை விலைக்கு எடுத்திருக்கப்பட வேண்டியவர் (2021 ஏலத்தின்போது). இந்த ஏலத்தில் தவறவிட்டது Gen Z திறமைகளான ப்ரியான்ஸ் ஆர்யா, ஸ்வஸ்திக் சிக்காரா. பெரும் நம்பிக்கை மற்றும் விலை கொடுத்து, சென்ற ஆண்டு எடுத்த சமீர் ரிஸ்வியை ஒரு கோடிக்கும் குறைவான விலைக்கு எடுத்திருக்கலாம். ஹாஸில்வுட் போன்ற ஒரு மேட்ச் வின்னிங் பந்துவீச்சாளரை எடுக்கத் தவறியது ஒரு பிழை, வாய்ப்பு இருந்தது, ஆனால் சிஎஸ்கே சென்றது தீபக் சாகருக்கு.



**பலம்-பலவீனம்**

சிஎஸ்கே வின் முக்கியப் பழங்களில் ஒன்று சேப்பாக்கம் ஆடுகளம். சுழல்பந்துக்குச் சாதகமான அந்த ஆடுகளத்தில் சிஎஸ்கே ஆடும் 7 போட்டிகளில் எப்படியாவது 5 போட்டிகளில் வென்று விடும், அதனால் அணி அந்த ஆடுகளத்தைச் சுற்றியே சுழல்பந்து வீச்சாளர்களால் கட்டமைக்கப்படும். இந்த முறை ஆடுகளம் சரியாக ஒத்துழைக்காததால் அணியால் சாதிக்க முடியவில்லை. அதுவுமல்லாமல் ருத்துராஜூக்கு சுழல்பந்து மீது ஒரு ஒவ்வாமை இருப்பதால் அவரால் 12 ஓவர்களை முழுவதும் முடிக்கமுடியவில்லை. நூர் ஒரு சூப்பர் ஸ்டார், ஆனால் பழைய ஸ்டார்களான அஸ்வின், ஜடேஜாவால் அவருக்கு ஒத்துழைப்பு வழங்க முடியவில்லை.

கலீல் உடன் கம்போஜ் ஆரம்பத்திலேயே கூட்டணி அமைத்திருந்தால் பலமாக இருந்திருக்கும்.



**ஆடும் லெவனின் நிறை குறைகள்**

முதல் கோணல் முற்றிலும் கோணல் என்பது போல கான்வே-வை நம்பி முதலில் இறக்காதது. சென்ற நூற்றாண்டில் எப்போதோ கிரிக்கெட் ஆடிய திரிபாதி, ஹூடா, விஜய் சங்கர் மேல் வைத்த நம்பிக்கை யை அணியுடனே சில ஆண்டுகள் பயணித்த இளைஞர்கள் ஷேக் ரஷீத், 18 வயது ஆன்ட்ரே சித்தார்த், வன்ஷ் பேடி, கோஷ்,நாகர்கோட்டி மேல் வைக்காதது தவறு. களமிறங்கினால் தான் அது சிங்கமா இல்லையா என்று

தெரியும். அணியின் நடுவரிசையைப் பலப்படுத்த ருத்துராஜ் நடுவில் வந்தது பலவீனமாகி விட்டது.




**ஆடும் லெவனில் நடந்த மாற்றங்களும் புதுவரவுகளின் பங்கும்**

வீரர்களுக்கு ஏற்படும் காயங்கள் அணிகளுக்குப் பாதிப்பை ஏற்படுத்தும் என்பதே கடந்தகால வரலாறு. ஆனால் முதல்முறையாக இந்தக் காயங்கள் நன்மை செய்தது சிஎஸ்கே-க்குத் தான். தூதுவன் வருவான், கண்ணீர் துடைப்பான், மழை பெய்ய்யும் என்று காத்திருந்த சிஎஸ்கே ரசிகர்களுக்கு ஆறுதலாக வந்தவவர்கள் தான் ஆயுஷ் மாத்ரே, உர்வில் பட்டேல் மற்றும் சிஎஸ்கேவின் எதிர்கால Faf ஆக நிலைபெறப்போகும் டெவால்டு பிரீவிஸ். இவர்கள் வந்தவுடன் அணியே வேறு மாதிரி பலமாக மாறிவிட்டது. அடுத்த ஆண்டு ருத்துராஜ் வந்தவுடன் அணி புத்துயிர் பெறும்.




**வெற்றி/தோல்விக்கான முதல் மூன்று முக்கியக் காரணங்கள்**

தோனி அடிக்கடி சொல்வது போல வெற்றி தோல்வி முக்கியமல்ல, ப்ராசஸ் தான் இன்றியமையாதது. ஆனால் அது இந்த முறை சரியாக இல்லை. அணி, நம்பி எடுத்த வீரர்களின் பங்களிப்புகள் முழுமையான அளவில் இல்லை. ஜடேஜாவால் பேட்ஸ்மேன் ஆகவோ, இல்லை பந்துவீச்சாளராகவோ சரியாகப் பங்களிக்க முடியவில்லை. அஸ்வின் பேசுமளவுக்கு செயலில் இல்லை, ஆப் ஸ்பின்னர் அஸ்வினைக் காண முடியவில்லை. பவர் பிளேவில் அஸ்வின்-தோனி நிகழ்த்திய மாயங்கள் கனவு போலாகிப் போனது.




**அணித்தலைவர் செயல்பாடு**

முதல் 5 போட்டிகளில் தலைவராக இருந்த ருத்துராஜ் பெற்ற வெற்றி ஒன்று, கடைசி 9 போட்டிகளில் தலைவராகத் தோனி வென்றது 3 போட்டிகள். மோசமான அணியின் செயல்பாடு காரணமாகவே இந்த நிலை. இதில் தலைவரின் செயல்பாடுகள் பற்றி சொல்லப் பெரிதாக எதுவுமில்லை. அடுத்த ஆண்டு வரும்போது ருத்துராஜ் விரும்பிய அணி இருக்கும். அவர் சற்று அதிகமாகத் தன் சுழல்பந்து வீச்சாளர்களை நம்ப வேண்டும்.




**கதாநாயகன்/கதாநாயகர்கள்**

இந்த ஆண்டின் முக்கியமான கதாநாயகர்கள் ஆயுஷ் மாத்ரே மற்றும் பிரீவிஸ். மாத்ரே இன்னும் சற்று அதிக நேரம் களத்தில் இருக்க முயற்சிக்க வேண்டும். பிரீவிஸ் ஒரு சூப்பர் ஸ்டார், நிச்சயமாக அவர் விரும்பும் அந்த இடத்தை அடைவார். Unsung ஹீரோக்கள் நூர் மற்றும் கலீல் அகமது விடாமுயற்சியுடன் மனந்தளராமல் பந்து வீசினார்கள், கம்போஜும் நன்றாக செயல்பட்டார்.




**2026 க்கான எதிர்பார்ப்பு**

வெற்றி தோல்வி என்பது விளையாட்டில் சாதாரணமான ஒன்று. ஆனால் அதிகமாக வெற்றிகளைக் குவித்துப் பழகிய அணி என்பதால் சிஎஸ்கே மேல் ரசிகர்களுக்கு எதிர்பார்ப்பு கூடுதலாக உள்ளது. அணியும் புத்துணர்வோடு ஆட முயல வேண்டும். மற்ற அணிகள் பெராரி காருடன் ரேஸுக்கு வரும்போது சிஎஸ்கே இன்னும் புராதான அம்பாஸடர் காரில் வருவது எவ்வகையிலும் உதவாது.

ஒருகாலத்தில் வெற்றி மேல் வெற்றிகளைக் குவித்து ஐபிஎல்லின் மான்செஸ்டர் யுனைட்டட் என்று புகழ்பெற்ற சிஎஸ்கே இன்று அதே மான்செஸ்டர் யுனைட்டட் போல் தோல்வியில் துவண்டு இருக்கிறது. தக்கனத தப்பிப்பிழைக்கும் என்பதை மனதில்

கொண்டு ஆடி, 2026 ஐபிஎல் இறுதிப்போட்டியில் சிஎஸ்கே பெங்களூரூவில் வெல்லுமா என்பதே அணியின் முன்னுள்ள கேள்வி.




**_ஷார்ட்ஸ்_**

*சென்னை அணி பத்தாவது இடத்தைப் பெற்றாலும் இந்த ஆண்டிற்கான நல்லொழுக்க அணிக்கான (பேர் ப்ளே) விருதைப் பெற்றுள்ளது. சென்னை அணி இந்த விருதைப் பெறுவது இது 7வது முறை.*

# மறக்க முடியாத போட்டி

- சு. பழனி செல்வகுமார்

இலங்கை சுதந்திர தினக் கோப்பைக்கு நிதஹாஸ் கோப்பை எனப் பெயரிட்டனர். சிங்கள மொழியில் நிதஹாஸ் என்றால் விடுதலை என்று பொருளாம்.

2018ல் நடந்த தொடர், டி20 தொடராக நடைபெற்றது. இலங்கை, பங்களாதேஷ், இந்தியா அணிகள் பங்கேற்றன. இந்திய அணி ரோகித் தலைமையில் இளம் வீரர்களுடன் சென்றது. பண்ட், வாசிங்டன் சுந்தர், சிராஜ், உனாட்கட், ஹூடா, விஜய் சங்கர், மனிஷ் பான்டே ஆகியோர் இடம் பெற்றிருந்தனர்.

இளம் அணி என்பதால் கடினமான தொடராக அமைந்தது. இந்தியாவும் பங்களாதேஷ்ம் இறுதிப் போட்டிக்குத் தகுதி பெற்றன. இறுதிப் போட்டி தான் மறக்க முடியாத போட்டி. அன்று நான் ரயிலில் சென்னை வந்து கொண்டிருந்தேன். அவ்வப்போது போனில் போட்டியைப் பார்த்துக் கொண்டே.

பங்களாதேஷ் முதலில் பேட்டிங் செய்தது. இரண்டாவது ஓவரை வீச வாசிங்டன் சுந்தரை அழைத்தார் ரோகித் (சுந்தரை பவர்ப்ளேவில் சரியாகப் பயன்படுத்திய கேப்டன் ரோகித்). 4வது ஓவரில் சுந்தர், லிட்டன் தாஸ் விக்கெட்டை வீழ்த்தினார்.

5வது ஓவரை சகாலிடம் கொடுத்தார் ரோகித். அந்த ஓவரில் தமீம் இக்பாலை சிறப்பான முறையில் கேட்ச் பிடித்தார் சர்துல் தாகூர். அதே ஓவரில் சர்க்காரும் அவுட் ஆனார்.




பங்களாதேஷ் பவர்ப்ளே முடிவில் 40/3, 10 ஓவர் முடிவில் 68/3. 11வது ஓவரில் ரஹீம் அவுட் ஆனார். ஆனால் மறுமுனையில் சிறப்பாக ஆடினார் ஷபீர் ரஹ்மான். ஷபீர் 77 ரன்கள் (7x4 4x6) அடித்தார். பங்களாதேஷ் 20 ஓவர்களில் 8 விக்கெட்டுகள் இழப்பிற்கு 166 ரன்கள் எடுத்தது.




இந்தியத் துவக்க வீரர்களாக ரோகித், தவான் களமிறங்கினர். பங்களாதேஷ் சுழற்பந்து வீச்சை வைத்துத் துவக்கியது. ஒரு முனையில் ஷகீப் இன்னொரு முனையில் மிராஸ்.

3வது ஓவரில் தவான் அவுட் ஆனார். அடுத்த வந்த ரெய்னா 4வது ஓவரில் டக் அவுட் ஆனார். பத்தாவது ஓவரில் ராகுல் அவுட் ஆகும் போது இந்திய அணிக்கு 83 ரன்கள் தேவைப்பட்டது.

13வது முடியும் போது ஒரு ஓவருக்கு 10 ரன்கள் தேவை என்ற நிலை. 14வது ஓவரில் கேப்டன் ரோகித் அவுட்டாக சிக்கல் தொடங்கியது.



5 ஓவர்களில் 52 ரன்கள் தேவை. களத்தில் மனிஷ் பான்டே மற்றும் விஜய் சங்கர். விஜய் சங்கர் பேட்டிங் செய்த முதல் சர்வதேசப் போட்டி அது. முஸ்தாபிஷுர் வீசிய 16வது ஓவரில் 8 ரன்கள் கிடைத்தது. சர்க்கார் வீசிய 17வது ஓவரில் 9 ரன்கள் கிடைத்தது.

3 ஓவர்களில் 34 ரன்கள் தேவை என்ற நிலை. முஸ்தாபிஷுர் வீசிய அந்த ஓவரில் முதல் நான்கு பந்துகளில் விஜய் சங்கர் ரன் எடுக்கவில்லை. 5வது பந்தில் ஒரு லெக்பை கிடைத்தது. 6வது பந்தில் பான்டே அவுட் ஆனார்.

2 ஓவர்களில் 33 ரன்கள் தேவை. 19வது ஓவரை ரூபெல் வீசினார். முதல் பந்தில் தினேஷ் கார்த்திக் லாங் ஆன் திசையில் சிக்ஸ் அடித்தார். 2வது பந்தில் லாங் ஆனில் போர், மூன்றாவது பந்தில் மிட் விக்கெட் திசையில் சிக்ஸ். 4வது பந்தில் ரன் இல்லை. 5வது பந்தில் இரண்டு ரன்கள். 6வது பந்தில் போர்.

கடைசி ஓவரில் 12 ரன்கள் தேவை. ஆனால் பேட்டிங் முனையில் விஜய் சங்கர். பந்து வீசப் போவது சர்க்கார். ஆட்டம் மதில் மேல் பூனை.

முதலில் ஒரு வைடு வீசினார் சர்க்கார். மீண்டும் வீசப்பட்ட பந்தில் சங்கர், ரன் எடுக்கவில்லை. 2வது பந்தில் ஒரு ரன் எடுத்தார் சங்கர். 3வது பந்தில் கார்த்திக் ஒரு ரன் அடிக்க மீண்டும் பேட்டிங் முனையில் விஜய் சங்கர்.

4வது பந்தில் ஒரு வழியாக போர் அடித்தார் சங்கர். 2 பந்தில் 5 ரன்கள் தேவை என்ற நிலை. விஜய் சங்கர் தூக்கி அடித்து அவுட் ஆனார். பேட்டிங் முனைக்கு ஓடிவிட்டார் கார்த்திக். இது தான் ஆட்டத்தின் திருப்புமுனை. கடைசிப் பந்தை சிக்ஸராக்கி வெற்றியைத் தந்தார் கார்த்திக். 5வது பந்தில் விஜய் சங்கர் அவுட் ஆனதால் இந்த வெற்றி சாத்தியமானது.




இரவு டேட்டா முடிந்ததால் கடைசி இரண்டு ஓவர்களை நான் பார்க்கவில்லை. நள்ளிரவில் எழுந்து ஸ்கோர் பார்த்த போது இந்தியா வென்றிருந்தது தெரியவந்தது.

# வெஸ்ட் இண்டீஸ் - அயர்லாந்து

வெஸ்ட் இண்டீஸ் அணி அயர்லாந்துக்கு சுற்றுப்பயணம் மேற்கொண்டு 3 ஒருநாள் போட்டிகளில் ஆடியது. அது முடிந்த பிறகு இங்கிலாந்து சென்று 3 ஒருநாள் போட்டிகளில் ஆடுகிறது. மீண்டும் அயர்லாந்துக்குத் திரும்பி டி20 போட்டிகளில் ஆடவுள்ளது.

வெஸ்ட் இண்டீஸ் அணியைப் பொறுத்தவரை 2023 உலகக் கோப்பைக்குத் தகுதிச் சுற்று ஆடியும் தேர்வாகவில்லை. 2027 உலகக் கோப்பைக்குத் தகுதி பெற இந்த ஒருநாள் தொடர்களில் வென்று தரவரிசையில் முன்னேற வேண்டிய கட்டாயம்.

மூன்று ஒருநாள் போட்டிகளும் டப்ளின் நகரில் நடைபெற்றது. மே 21ல் நடைபெற்ற முதல் ஒருநாள் போட்டியில் அயர்லாந்து அணியில் காடே கார்மிக்கேல், லியாம் மெக்கார்தி, தாமஸ் மேய்ஸ் அறிமுகம் ஆனார்கள். முதலில் பேட்டிங் செய்த அயர்லாந்து அணியின் துவக்க வீரர் ஆண்டி பால்பெர்னி (112) சதமடித்தார். கேப்டன் பால் ஸ்டிர்லிங் (54) & ஹாரி டெக்டார் (56) அரைசதங்களால், 303 ரன்களைக் குவித்தது.

மேத்யூ போர்ட் 3 விக்கெட்டுகளையும், அல்ஸாரி ஜோசப் 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர். வெஸ்ட் இண்டீஸ் 23 உதிரிகளையும் வழங்கியது.



சேஸ் செய்த வெஸ்ட் இண்டீஸ் அணி அடுத்தடுத்து விக்கெட்டுகளை இழந்தது. ராஸ்டன் சேஸின் அரைசதம் (55) மட்டுமே ஆறுதல். ஜஸ்டின் கிரீவ்ஸ் 35 ரன்களும் மேத்யூ போர்ட் 38 ரன்களும் எடுத்தனர். வெஸ்ட் இண்டீஸ் 179 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது.

பேரி மெக்கார்த்தி 4 விக்கெட்டுகளையும், ஜார்ஜ் டாக்ரெல் 3 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர். அயர்லாந்து 124 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது. **ஆட்டநாயகன் - ஆண்டி பால்பெர்னி.**

மே 23ல் நடைபெற்ற இரண்டாவது ஒருநாள் போட்டியில் பழிக்குப் பழி வாங்க நினைத்தது வெஸ்ட் இண்டீஸ். முதலில் பேட்டிங் செய்த வெஸ்ட் இண்டீஸ் அணியின் கேசி கார்டி (102) சதமடித்தார். கேப்டன் சாய் ஹோப் 49 ரன்களும், ஜஸ்டின் கிரீவ்ஸ் 44* ரன்களும் அடித்தனர். இறுதிக்கட்டத்தில் ***மேத்யூ போர்ட் 16 பந்துகளில் அரைசதம் அடித்து டீ வில்லியர்ஸ்ன் உலக சாதனையை சமன் செய்தார்.***

வெஸ்ட் இண்டீஸ் 8 விக்கெட்டுகள் இழப்பிற்கு 352 ரன்களைக் குவித்தது. லியாம் மெக்கார்தி 3 விக்கெட்டுகளையும், பேரி மெக்கார்த்தி, ஜோஷ் லிட்டில் தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

அயர்லாந்தை சேஸ் செய்ய விடாமல் செய்ய வெஸ்ட் இண்டீஸ் தயாராக இருந்த நிலையில், மழை அயர்லாந்தை பேட்டிங் செய்யவே விடவில்லை. போட்டி முடிவு இல்லாமல் போனது.

மே 25ல் நடைபெற்ற மூன்றாவது ஒருநாள் போட்டியில் அயர்லாந்து அணியில் ஜோர்டன் நீல் அறிமுகம் ஆனார். வெஸ்ட் இண்டீஸ் முதலில் பேட்டிங் செய்தது. கேஸி கார்டி 15 போர்கள் மற்றும் 8 சிக்ஸர்கள் உட்பட 170 ரன்கள் அடித்தார். சாய் ஹோப் (75) மற்றும் ஜஸ்டின் கிரீவ்ஸ் (50) அரை சதங்கள் அடித்தனர். உதிரிகள் 27 கிடைக்க வெஸ்ட் இண்டீஸ் 385 ரன்களைக் குவித்தது. பேரி மெக்கார்தி 3 விக்கெட்டுகளையும், லியாம் மெக்கார்தி 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.




இமாலய இலக்கைத் துரத்திய அயர்லாந்து அணியின், கார்மிக்கேல் 48 ரன்களை அடித்தார். ஜோஷ் லிட்டில் மற்றும் ஜோர்டன் நீல் பேட்டிங் செய்ய வரமுடியவில்லை. எனவே அயர்லாந்து 165 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. ஜெய்டன் சீல்ஸ் 3 விக்கெட்டுகளை வீழ்த்தினார். வெஸ்ட் இண்டீஸ் 197 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது. **ஆட்ட நாயகன் மற்றும் தொடர் நாயகன் கேஸி கார்டி.**

# மைல் கல்லை எட்டியவர்கள்

| | | |
|---|---|---|
|  | ஸ்காட்லாந்து அணியின் துவக்க வீரர் ஜார்ஜ் முன்சே ஒருநாள் போட்டிகளில் 2000 ரன்களைக் கடந்தார். | 2000 |
| 100 | ஸ்காட்லாந்து அணியின் இடதுகை சுழற்பந்து வீச்சாளர் மார்க் வாட் ஒருநாள் போட்டிகளில் தனது 100வது விக்கெட்டை வீழ்த்தினார். |  |
|  | தென்னாப்பிரிக்கா அணியின் ஆல்ரவுண்டர் சோலி டிரையான் ஒருநாள் போட்டிகளில் 2000 ரன்களைக் கடந்தார். | 2000 |
| 1000 | இலங்கை அணியின் ஹர்ஷிதா சமரவிக்ரம ஒருநாள் போட்டிகளில் 1000 ரன்களைக் கடந்தார். |  |

துடுப்பாட்டம்
கிரிக்கெட்டும் கிரிக்கெட் சார்ந்தும்

| ஐபிஎல் -மைல் கல்லை எட்டியவர்கள் | | |
|---|---|---|
| | தென்னாப்பிரிக்கா அணியின் ஆல்ரவுண்டர் சோலி டிரையான் ஒருநாள் போட்டிகளில் தனது 50வது விக்கெட்டை வீழ்த்தினார். | 50 |
| 50 | நெதர்லாந்து அணியின் வேகப்பந்து வீச்சாளர் பால் வான் மீக்கீரன் ஒருநாள் போட்டிகளில் தனது 50வது விக்கெட்டை வீழ்த்தினார். | |
| | எமிரேட்ஸ் அணியின் சுழற்பந்து வீச்சாளர் ஆயன் அப்சல் கான் ஒருநாள் போட்டிகளில் தனது 50வது விக்கெட்டை வீழ்த்தினார். | 50 |
| 1000 | ஸ்காட்லாந்து அணியின் ஆல்ரவுண்டர் பிரண்டன் மெக்முலன் ஒருநாள் போட்டிகளில் 1000 ரன்களைக் கடந்தார். | |
| | நெதர்லாந்து அணியின் கேப்டன் ஸ்காட் எட்வர்ட்ஸ் ஒருநாள் போட்டிகளில் 2000 ரன்களைக் கடந்தார். | 2000 |

# மைல் கல்லை எட்டியவர்கள்

| | | |
|---|---|---|
| 50 | எமிரேட்ஸ் அணியின் வேகப்பந்து வீச்சாளர் முகமும் ஜாவாத்துல்லா சர்வதேச டி20 போட்டிகளில் தனது 50வது விக்கெட்டை வீழ்த்தினார். | |
| | எமிரேட்ஸ் அணியின் அலிஷன் ஷராபு சர்வதேச டி20 போட்டியில் 1000 ரன்களைக் கடந்தார். | 1000 |
| 50 | இங்கிலாந்து அணியின் சுழற்பந்து வீச்சாளர் சோயப் பஷீர் டெஸ்ட் போட்டிகளில் தனது 50வது விக்கெட்டை வீழ்த்தினார். | |
| | ஒருநாள் போட்டிகளில் 6000 ரன்களைக் கடந்தார் அயர்லாந்து கேப்டன் பால் ஸ்டெர்லிங். | 6000 |
| 100 | அமெரிக்க அணியின் வேகப்பந்து வீச்சாளர் சுப்ரப் நேத்ராவல்கர் ஒருநாள் போட்டிகளில் தனது 100வது விக்கெட்டை வீழ்த்தினார். | |

# பிரண்டன் மெக்முலன்

பிரண்டன் மெக்முலன், ஸ்காட்லாந்து அணியின் ஆல்ரவுண்டர். வலதுகை டாப் ஆர்டர் பேட்ஸ்மேன், வலதுகை மித வேகப் பந்து வீச்சாளர்.

மெக்முலன் 30 ஒருநாள் போட்டிகளில் ஆடி 1000 ரன்களைக் கடந்துள்ளார். 42 விக்கெட்டுகளையும் வீழ்த்தியுள்ளார்.

உலகக் கோப்பைத் தகுதிச் சுற்றுப் போட்டியில் ஸ்காட்லாந்து அணி வெஸ்ட் இண்டீஸ் அணியை வென்றது. அந்தப் போட்டியில் 3 விக்கெட்டுகளை வீழ்த்தி, அரை சதமும் அடித்து ஆட்டநாயகன் ஆனவர் மெக்முலன்.

தென்னாப்பிரிக்காவில் பிறந்த மெக்முலன் ஒருநாள் போட்டிகளில் 3 சதங்கள் அடித்துள்ளார். அதில் ஒன்று அமெரிக்கா அணிக்கு எதிராக அடித்த 151. ஸ்காட்லாந்து அணிக்காக 150+ ரன் அடித்த மூன்றாவது வீரர் மெக்முலன்.




25 வயதான பிரண்டன் மெக்முலன் டி20 போட்டிகளிலும் தவிர்க்க முடியாத வீரர். 16 சர்வதேச டி20 போட்டிகளில் 497 ரன்களை அடித்துள்ளார்.

மேலும் வளர பிரண்டன் மெக்முலனுக்கு துடுப்பாட்டம் குழுவின் வாழ்த்துகள்!



# <u>சன்ரைஸர்ஸ் ஹைதராபாத்</u>

- *கா. இராமச்சந்திரன் (@Rama_Chandran_K)*

286…. ஆம் இப்படித்தான் இந்தக் கட்டுரையைத் தொடங்க வேண்டும். இந்தத் தொடரின் முதல் ஆட்டத்திலேயே 286 ரன்களை விளாசி 2024ல் எங்கு விட்டோமோ அதே இடத்தில் தொடங்கியுள்ளோம், அதிரடி தான் எங்கள் பாதை என்ற அறிவிப்பை மீண்டும் ஒரு முறை உரக்கச் சொல்லி இந்தத் தொடரைத் தொடங்கியது ஹைதராபாத் அணி.




ஹைதராபாத் அணி கடந்த சில தொடர்களாகவே ஒரு அதிரடி பேட்டிங் அணியாகத் தன்னை நிலைநிறுத்தியது. அதற்குக் காரணமாக இருந்த வீரர்களான கிளாசன், ட்ராவிஸ் ஹெட், அபிஷேக் சர்மா, நிதீஷ் குமார் ரெட்டி மற்றும் கம்மின்ஸைப் பிரதான வீரர்களாகத் தக்கவைத்தாங்க. ஏலத்திலும் இஷான் கிஷான், அனிகெட் வர்மா, அபினவ் மனோகர்னு பேட்டிங்கை வலுப்படுத்திட்டாங்க.

பந்து வீச்சில் ஷமி, ஈஷான் மலிங்கா, ஹர்ஷல் பட்டேல், ஜெயதேவ் உடன்கட்னு திட்டமிட்டு தான் எடுத்தாங்க. ஆனால் டேனியல் விட்டோரி, முத்தையா முரளிதரன் பயிற்சியாளர் முகாமில் இருக்கும் ஒரு அணி பிரதான சுழற்பந்து வீச்சாளர் ஒருவரைத் தன் வசப்படுத்தவில்லை என்பது ஆச்சர்யமே.




ஒரு பழமொழி ஒன்று இருக்கு **வைச்சா குடும்பி எடுத்தா மொட்டை** என்று அப்படித்தான் ஹைதராபாத் அணியின் ஆட்டமும் இருந்தது. ஒரு சீரான ஆட்டத்தை வெளிப்படுத்தத் தவறிக் கொண்டே இருந்தனர். இங்கிலாந்தின் பேஸ்பால் அப்ரோச் போல் தான் இவர்களின் ஆட்டமும் இந்தத் தொடரில் இருந்தது. ஆடும் 11ல் பேட்ஸ்மேன்கள் நிலையான இடத்தைப் பெற்றுவிட்டனர் அபிஷேக், ஹெட், இஷான், கிளாசன், அனிகெட் மற்றும் நிதீஷ் என்று. பந்து வீச்சில் தான் சிறு சிறு மாற்றங்கள் நிகழ்ந்தன.

முதல் ஆட்டமே வெற்றியோடு தொடங்கிய ஹைதை அணிக்கு அடுத்த 4 ஆட்டங்கள் தொடர் தோல்வி பெரும் நெருக்கடியை ஏற்படுத்தியது. அந்த அனைத்து ஆட்டங்களிலும் ஒரு பக்கம் அதிரடியாகச் சென்று பேட்ஸ்மேன்கள் சொதப்பலும், மறுபக்கம் சொதப்பலான பந்துவீச்சும். அறுவை சிகிச்சையில் இருந்து மீண்டு வந்த ஷமியின் பந்து வீச்சு பழைய வீரியத்தோடு இல்லாதது அணிக்குப் பெரும் பின்னடைவு. மற்ற பந்துவீச்சாளர்களும் இம்பேக்ட் ஏற்படுத்த முடியாமல் திணறினர். எதிரணியினர் பெரிய இலக்கைக் கூட எளிதாக எட்டியதே இதற்கு சாட்சி.

மீண்டும் அவ்வப்போது குடும்பி என்று தொடரின் இறுதியில் ஓரளவு சில வெற்றிகளுடன் முடித்தனர். இருப்பினும் அதிரடி பேட்ஸ்மேன்களைக் கொண்ட ஹைதராபாத் அணிக்கும் அந்த அணியின் ரசிகர்களுக்கும் இந்தத் தொடர் ஒரு ஏமாற்றம் தான்.

வெற்றிக்கும் தோல்விக்கும் முத்தான மூன்று காரணங்களை ஆராய்ந்தால், **கத்தி எடுத்தவனுக்குக் கத்தியால்தான் சாவு** என்ற பழமொழி நினைவுக்கு வந்து

வெற்றிக்கும் தோல்விக்கும் இவர்களின் அதிரடி ஆட்டமே காரணம் என்று தோன்றுகிறது. சூழலைக் கணித்து விளையாடாமல் அதிரடியாய் வான வேடிக்கை காட்டுவது மட்டுமே எண்ணமாக இருந்த பேட்ஸ்மேன்களே தொடர் தோல்விக்குக் காரணம்.

தனிநபர் ஒரு சில நாட்கள் தன் அபார ஆட்டத்தால் வெற்றியைப் பெற்றுத்தரலாம். ஆனால் ஒரு தொடர் என்று வரும்பொழுது அணியாக சிறப்பாக செயல்பட வேண்டியது கட்டாயம். அது இந்த முறை ஹைதராபாத் அணிக்கு நிகழவில்லை என்பது தான் பிரச்சனை. நான்கு ஆட்டம் முடிவில் ஒரு சுய ஆய்வு செய்து அணியில் என்ன தேவை ஆட்டத்தில் என்ன தேவை என்று விவாதிக்கப்படவில்லையோ என எண்ணத் தோன்றுகிறது. ஏனெனில் சர்வதேசப் போட்டிகளின் ஜாம்பவான்களை உள்ளடக்கிய அணி நிர்வாகம் இதை எப்படித் தவறவிட்டது எனும் கேள்வி எழுகிறது.

அணித்தலைவராக கம்மின்ஸின் செயல்பாடு களத்தில் கை உடைந்தது போல் இருந்தது என்று கூறினால் மிகையாகாது. களத்திற்கு வெளியே செய்ய வேண்டிய திட்டமிடல் சரியாக செய்யப்படாததால் களத்தின் உள்ளே அவரது செயல்பாட்டை விமர்சிக்க ஏதும் இல்லை எனத் தோன்றுகிறது.




**இந்தத் தொடரில் பேட்டிங்கில் சதம் விளாசிய அபிஷேக் சர்மா (439 ரன்கள்), இஷான் கிஷான் & கிளாசன் (487 ரன்கள்) கவனிக்கத்தக்க ஆட்டத்தை வெளிப்படுத்தியிருந்தனர். பந்துவீச்சில் கம்மின்ஸ் 16 விக்கெட்களை வீழ்த்தினார்.**

13 புள்ளிகளுடன் ஆறாவது இடத்தில் இந்தத் தொடரை முடித்த சன்ரைசர்ஸ் ஹைதராபாத் அணியின் பந்து வீச்சில் சீரிய மாற்றம் தேவை. இம்பேக்ட் பந்து வீச்சாளர்கள் தேவை. அதை விட முக்கியமாக, அணுகுமுறையிலும் சூழலைப் பொறுத்து அணுகும் விதமாக மாற்றம் தேவை.

# ஐபிஎல் 2025 (மே 1-10)

## ராஜஸ்தான் - மும்பை

ரிக்கெல்டன் (61), ரோகித் சர்மா (53) அரை சதங்கள் அடித்தனர். சூர்ய குமாரும், பாண்ட்யாவும் 23 பந்துகளில் 48 ரன்கள் அடித்து ஆட்டமிழக்காமல் இருந்தனர். மும்பை 217 ரன்கள் குவித்தது.



ராஜஸ்தான் அணி எளிதாக சரணடைந்தது. அதிகபட்சமாக ஆர்ச்சர் 30 ரன்கள் அடித்தார். பவுல்ட் மற்றும் கரண் சர்மா தலா 3 விக்கெட்டுகளையும், பும்ரா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர். ராஜஸ்தான் 117 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. **மும்பை 100 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது.**

## குஜராத் - ஹைதராபாத்

குஜராத் துவக்க வீரர்கள் சுதர்சன் (48) - கில் (76) 87 ரன்கள் குவித்தனர். அடுத்த வந்த பட்லரும் (64) அரைசதம் அடித்தார். குஜராத் 224 ரன்களைக் குவித்தது. ஜெயதேவ் உனாட்கட் 3 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.



அபிஷேக் சர்மா அதிரடியாக ஆடி அரைசதம் (74) அடித்தார். அவர் அவுட்டானதும் ஆட்டம் குஜராத் வசம் சென்றது. முகமது சிராஜ் மற்றும் பிரசித் கிருஷ்ணா தலா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினர். **குஜராத் அணி 38 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது.**

**<u>பெங்களூரு - சென்னை</u>**

பெங்களூரு துவக்க வீரர்களான ஜேக்கப் பெத்தேல் (55), விராட் கோலி (62) அரை சதங்கள் அடித்து அடித்தளம் அமைக்க 14 பந்துகளில் 53 ரன்கள் அடித்து பங்களா கட்டினார் ரோமாரியோ ஷெப்பர்ட். பெங்களூரு 5 விக்கெட்டுகள் இழப்பிற்கு 213 ரன்கள் குவித்தது.



எட்டக்கூடிய இலக்கு தான் என்ற நம்பிக்கை தந்தார் ஆயுஷ் மகட்ரே. 94 ரன்னில் இருக்கும் போது கூட அணிக்காக தூக்கி அடித்து அவுட்டானார். ஆனால் மற்றவர்கள் தூக்கி அடிக்க வேண்டிய நேரத்தில் உருட்ட சென்னை அணிக்கு இன்னொரு தோல்வி பரிசாகக் கிடைத்தது. ஜடேஜா 77 ரன்கள் எடுத்து ஆட்டமிழக்காமல் இருந்தார். லுங்கி நிகிடி 3 விக்கெட்டுகளை வீழ்த்தினார். **பெங்களூரு 2 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது.**

**<u>கொல்கத்தா - ராஜஸ்தான்</u>**

கடந்த போட்டியைப் போல ஒரு வெஸ்ட் இண்டீஸ் வீரருக்கு ஆட்டம் பிடித்தது. ரஸல் 25 பந்துகளில் 57* ரன்கள் அடித்தார். ரகுவன்சி 44, குர்பாஸ் 35, ரகானே 30 எனப் பங்களிக்க கொல்கத்தா 206 ரன்களை எட்டியது.




ராஜஸ்தான் தொடர்ச்சியாக விக்கெட்டுகளை இழந்தது. கேப்டன் ரியான் பராக் ஒரு முனையில் நின்று துவம்சம் செய்தார். 95 ரன்கள் எடுத்து அவர் அவுட் ஆனதும் ஆட்டம்

கொல்கத்தா வசம் வந்தது. ஆர்ச்சர் - சுபம் துபே இணை ராஜஸ்தான் பக்கம் காற்று வீச வைத்தது. மீண்டும் ஒரு கடைசிப் பந்தில் துபே சொதப்ப ராஜஸ்தான் காற்று கொல்கத்தா வசமானது. **கொல்கத்தா 1 ரன் வித்தியாசத்தில் வெற்றி**. மொயின் அலி, ஹர்சித் ராணா மற்றும் வருண் சக்ரவர்த்தி தலா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினர்.

**<u>பஞ்சாப் - லக்னோ</u>**

பிரப்சிம்ரன் சிங் அதிரடியாக ஆடி 91 ரன்கள் அடித்தார். ஸ்ரேயாஸ் ஐயர் 45, ஷஷாங் சிங் 33* எனப் பங்களிக்க பஞ்சாப் 236 ரன்கள் குவித்தது. ஆகாஷ் சிங் மற்றும் திக்வேஸ் ரத்தி தலா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினர்.




லக்னோவின் மூவேந்தர்கள் சொதப்ப ஆட்டம் பஞ்சாப் வசம் போனது. ஆயுஷ் பதோனி 74, அப்துல் சமாத் 45 என அதிரடி காட்டினர். ஆனாலும் **பஞ்சாப் 37 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது.** அர்ஷதீப் சிங் 3 விக்கெட்டுகளையும், ஓமர்சாய் 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

**<u>ஹைதராபாத் - டெல்லி</u>**

ஹைதராபாத் அணி முதல் முறையாக தரமான பந்துவீச்சைத் தந்தது. ஆடுகளத்தின் தன்மை மற்றும் ஆட்டத்தின் போக்கை உணர்வதற்கு முன்பாக டெல்லி அணி 6 விக்கெட்டுகளை இழந்து விட்டது. ஸ்டப்ஸ் மற்றும் அஸூடோஸ் தலா 41 ரன்கள் அடிக்க டெல்லி 133 ரன்களை எட்டியது.

இரண்டாவது இன்னிங்ஸ் தொடங்குவதற்கு முன்பாக மழை தொடங்கியது. 11.45க்கு மைதானம் தயாரானால் 5 ஓவர் போட்டி நடத்த திட்டமிடப்பட்டது. மழை அனுமதி தர மறுக்க, **போட்டி முடிவு இல்லாமல் போனது**.

**<u>மும்பை - குஜராத்</u>**

குஜராத் அணி கட்டுக்கோப்பாகப் பந்துவீசியது, கில் பந்துவீச்சில் செய்த மாற்றங்களுக்கு பலன் கிடைத்தது. வில் ஜாக்ஸ் மட்டும் அரைசதம் (53) கடந்தார். மும்பை 8 விக்கெட்டுகள் இழப்பிற்கு 155 ரன்களே எடுத்தது. சாய் கிஷோர் 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.

இரண்டாவது இன்னிங்ஸ் துவக்கத்திலே காற்று வீசத் தொடங்கியது, எப்போது வேண்டுமானாலும் மழை வரும் சூழல். டக்வொர்த் லூயிஸ் முறைப்படி இரு

அணிகளும் மாறி மாறி வெற்றி அருகில் நெருங்கினர். மும்பை அணி கை ஓங்கி இருந்த போது வில் ஜாக்ஸ் வீசிய ஓவரில் 15 ரன்கள் கிடைக்க ஆட்டம் குஜராத் பக்கம் சென்றது. மீண்டும் போட்டி தொடங்கிய போது பும்ரா, பவுல்ட் மும்பை அணியை வெற்றிக்கு அருகில் நகர்த்தினர்.



2வது குறுக்கீடுக்கு பிறகு 6 பந்துகளில் 12 ரன்கள் இலக்காக நிர்ணயிக்கப்பட்டது. **குஜராத் அணி 3 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது**. பவுல்ட், பும்ரா, அஸ்வனி குமார் தலா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினர்.

**<u>கொல்கத்தா - சென்னை</u>**

சென்னை அணி ஓரளவுக்கு நன்றாகப் பந்து வீசியது. ரஹானே 48, ரஸல் 38, பாண்டே 36* என அடிக்க கொல்கத்தா 179 ரன்களை எடுத்தது. நூர் அகமது 4 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.



180+ இலக்கு என்றால் சென்னை அணிக்கு சில ஆண்டுகளாக ஒவ்வாமை. ஆனால் இந்த முறை சரியாக 180 இலக்கு. துவக்க வீரர்கள் ரன் எடுக்காமலே வீழ்ந்தனர். அறிமுக வீரர் உர்வில் 11 பந்துகளில் 31 ரன்கள் அடித்தார். பிரிவிஸ் 25 பந்துகளில் 52 ரன்கள் அடித்தார். **சென்னை அணி 2 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது**. வைபவ் அரோரா 3 விக்கெட்டுகளையும், ஹர்சித் ராணா மற்றும் வருண் தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

# டெல்லி கேப்பிட்டல்ஸ்

- *சு. பழனி செல்வகுமார்*

டெல்லி கேப்பிட்டல்ஸ் அணி ஏலத்திற்கு முன்பாக அக்ஸர் பட்டேல், குல்தீப் யாதவ், டிரிஸ்டன் ஸ்டப்ஸ் மற்றும் அபிஷேக் போரல் ஆகியோரைத் தக்கவைத்தது. ஏலத்திலும் ஆக்ரோசமாக இறங்கியது. கே எல் ராகுல், ஸ்டார்க் மற்றும் நடராஜனை அதிக விலைக்கு வாங்கியது. முகேஷ் மற்றும் ஜேக் பிரேசரை ரைட் டு மேட்ச் முறையில் வாங்கியது.

அஸுடோஸ் சர்மா, மோகித் சர்மா, ரிஸ்வி, டுபிளசிஸ், விப்ரஜ் குறைந்த விலையில் கிடைத்த நல்ல வீரர்கள்.




கே எல் ராகுலைக் கேப்டனாக்குவார்கள் என்று எதிர்பார்த்து இருந்த வேளையில் அக்ஸர் பட்டேலைக் கேப்டனாக்கினார்கள்.

முதல் போட்டியிலே பரபரப்பாக சென்று ஒரு விக்கெட் வித்தியாசத்தில் வென்றது டெல்லி. எங்கே சறுக்கியது என்று கண்டுபிடிக்கவே முடியாத அளவில் ஒரு அணி என்றால் அது டெல்லி தான்.

துவக்க வீரர்கள் சரியாக அமையவில்லை. நிறைய இணைகளை மாற்றியும் எந்த இணையும் ரன் குவிக்கவில்லை.

அஸுடோஸ் தவிர்த்து யாரும் பெரிய அளவில் அதிரடியாக ஆடும் வீரர்கள் இல்லை. கேப்டன் அக்ஸர் பந்துவீச்சில் பெரிய அளவில் எதுவும் செய்யவில்லை. பேட்டிங் செய்தார் அதிலும் தாக்கத்தை ஏற்படுத்தவில்லை.

பந்து வீச்சைப் பொறுத்தவரை நிறைய போட்டிகளில் மூன்று சுழற்பந்து வீச்சாளர்களை வைத்து ஆடிய அணி டெல்லி. விப்ரஜ், புதுமுக வீரர் அவரைப் பந்துவீசப் பயன்படுத்திய அளவிற்கு பேட்டிங்கில் பயன்படுத்தவில்லை.

முதல் நான்கு போட்டிகளில் வென்ற அணி அதற்குப் பிறகு சறுக்கத் தொடங்கியது. இறுதிக்கட்டப் போட்டிகளில் அக்ஸர் இல்லாதது மேலும் பின்னடைவைத் தந்தது.

இளம் வீரர்களில் விப்ரஜைத் தவிர யாருக்கும் பெரிய அளவில் வாய்ப்பு தரவில்லை. வெற்றி பெறும் அணியில் மாற்றம் வேண்டாம் என்று நடராஜனுக்கு வாய்ப்பு தரவில்லை.




பாதி தொடருக்குப் பிறகு எதிரணிகள் டெல்லி அணியின் பலவீனத்தைப் புரிந்து கொண்டன. கடைசி 5 போட்டிகளில் 4ல் தோல்வி, ஒரு போட்டியில் முடிவு இல்லை. பலவீனத்தில் இருந்து டெல்லி அணியும் மீளவில்லை.

**<u>அதிக ரன்கள் அடித்த வீரர்கள்</u>**

கே எல் ராகுல் - 539 ரன்கள் (1 சதம், 3 அரை சதங்கள்)

அபிஷேக் போரல் - 301 ரன்கள் ( 1 அரை சதம்)

**<u>அதிக விக்கெட்டுகள் எடுத்த வீரர்கள்</u>**

குல்தீப் யாதவ் -15 விக்கெட்டுகள்

மிட்செல் ஸ்டார்க் - 14 விக்கெட்டுகள்

# டெஸ்ட் தி பெஸ்ட்

ஐசிசி
தர வரிசை



| அணிகள் | | |
|---|---|---|
| 1 | ஆஸ்திரேலியா | 126 |
| 2 | இங்கிலாந்து | 113 |
| 3 | தென் ஆப்பிரிக்கா | 111 |
| 4 | இந்தியா | 105 |
| 5 | நியூஸிலாந்து | 95 |
| 6 | இலங்கை | 87 |
| 7 | பாகிஸ்தான் | 78 |
| 8 | வெஸ்ட் இண்டீஸ் | 73 |
| 9 | பங்களாதேஷ் | 62 |
| 10 | அயர்லாந்து | 30 |

| பந்து வீச்சாளர் | | |
|---|---|---|
| ஜஸ்பிரிட் பும்ரா | இந்தி | 908 |
| ககிஸோ ரபாடா | தெ ஆ | 837 |
| பாட் கம்மின்ஸ் | ஆஸி | 824 |
| ஜோஷ் ஹசல்வுட் | ஆஸி | 818 |
| நாதன் லைன் | ஆஸி | 812 |
| நோமன் அலி | பாக் | 806 |
| மார்கோ யென்சென் | தெ ஆ | 785 |
| மாட் ஹென்றி | நியூஸி | 782 |
| பிரபாத் ஜெயசூர்யா | இலங் | 751 |
| ரவிந்திர ஜடேஜா | இந்தி | 745 |





| பேட்ஸ்மேன் | | | |
|---|---|---|---|
| 1 | ஜோ ரூட் | இங்கி | 888 |
| 2 | ஹாரி புரூக் | இங்கி | 873 |
| 3 | கேன் வில்லியம்சன் | நியூஸி | 867 |
| 4 | யெஜெஸ்வி ஜெய்ஸ்வால் | இந்தி | 847 |
| 5 | ஸ்டீவன் ஸ்மித் | ஆஸி | 823 |
| 6 | டெம்பா பவுமா | தெ ஆ | 769 |
| 7 | கமிந்து மெண்டிஸ் | இலங் | 761 |
| 8 | டிராவிஸ் ஹெட் | ஆஸி | 748 |
| 9 | உஸ்மான் கவாஜா | ஆஸி | 739 |
| 10 | ரிசப் பண்ட் | இந்தி | 739 |
| | சவுத் ஷகீல் | பாக் | 739 |

| ஆல் ரவுண்டர் | | |
|---|---|---|
| ரவிந்திர ஜடேஜா | இந்தி | 400 |
| மெஹிதி ஹசன் | பங்க | 327 |
| மார்கோ யென்சென் | தெ ஆ | 294 |
| பாட் கம்மின்ஸ் | ஆஸி | 271 |
| ஷகீப் அல் ஹசன் | பங்க | 253 |
| ஜேசன் ஹோல்டர் | வெ இ | 249 |
| கஸ் அட்கின்சன் | இங்கி | 246 |
| ஜோ ரூட் | இங்கி | 243 |
| பென் ஸ்டோக்ஸ் | இங்கி | 241 |
| மிட்செல் சாண்ட்னர் | நியூஸி | 222 |

# இங்கிலாந்தில் இந்தியா அணி

இந்தியா 1932 முதல் இங்கிலாந்து சென்று டெஸ்ட் தொடர்களில் ஆடி வருகிறது. 1932ல் இந்திய அணி, ஐசிசி உறுப்பினராகி லார்ட்ஸ் மைதானத்தில் முதல் டெஸ்ட் போட்டியில் ஆடியது. இந்திய அணியின் கேப்டனாக சிகே நாயுடு செயல்பட்டார்.

1936ல் மகராஜ்குமார் தலைமையில் சென்ற இந்திய அணி மூன்று டெஸ்ட் போட்டிகளில் ஒன்றை டிரா செய்து, இரண்டில் தோற்றது.

இரண்டாம் உலகப் போருக்குப்பின் 1946ல் இந்திய அணி இப்திகார் அலிகான் பட்டோடி தலைமையில் இங்கிலாந்து சென்று 3 டெஸ்ட் போட்டிகளில் ஆடியது. இப்திகார் 1930களில் இங்கிலாந்து அணிக்காக ஆடியவர் என்பது குறிப்பிடத்தக்கது. ஒரு போட்டியில் தோற்று, இரண்டு டெஸ்ட்களை டிரா செய்தது இந்தியா.

**சுதந்திரத்திற்குப் பிறகு**

சுதந்திரத்திற்குப் பிறகு இந்திய அணி விஜய் ஹசாரே தலைமையில் 1952ல் இங்கிலாந்து சென்றது. அதுவரை 3 நாட்கள் போட்டியாக நடந்த டெஸ்ட் போட்டிகள் 1952ல் ஐந்து நாட்கள் போட்டியாக நடந்தது. எலிசபெத் மகாராணி லார்ட்ஸ் மைதானத்திற்கு வந்து இந்திய வீரர்களை சந்தித்தார்.



லார்ட்ஸில் நடைபெற்ற போட்டியில் வினோ மன்கட் சதமடித்தார், ஐந்து விக்கெட்டுகளையும் வீழ்த்தினார். இந்தியா 3 போட்டிகளில் தோற்றது, ஒரு போட்டியை டிரா செய்தது.

1959ல் தத்தா கெய்க்வாட் தலைமையில் சென்ற இந்திய அணி 5 டெஸ்ட் போட்டிகளிலும் தோற்றது.

1967ல் மன்சூர் அலிகான் பட்டோடி தலைமையில் சென்ற இந்திய அணி 3 டெஸ்ட் போட்டிகளிலும் தோற்றது.

1971ல் அஜித் வடேகர் தலைமையில் சென்ற இந்திய அணி இங்கிலாந்தில் முதல் முறையாக டெஸ்ட் போட்டியில் வென்றது. தொடரையும் வென்றது. முதல் இரண்டு டெஸ்ட் போட்டிகளை டிரா செய்த இந்திய அணி ஓவலில் நடைபெற்ற மூன்றாவது டெஸ்டில் வென்றது.

ஆகஸ்ட் 19-24, 1971, கென்னிங்ஸ்டன் ஓவல்

*இங்கிலாந்து - 355*

ஆலன் நாட் - 90

ஏக்நாத் சோல்கர் - 3/28

*இந்தியா - 284*

பரூக் இன்சினியர் - 59

ரே இல்லிங்வொர்த் - 5/70



*இங்கிலாந்து - 101*

பிரையன் லக்ஹர்ஸ்ட் -33

பக்வந்த் சந்திரசேகர் - 6/38

*இந்தியா - 174/6*

அஜித் வடேகர் - 45

டேரக் அண்டர்வுட் - 3/72

1974ல் மீண்டும் அஜித் வடேகர் தலைமையில் சென்ற இந்திய அணி மூன்று டெஸ்ட் போட்டிகளிலும் தோற்றது. குறிப்பாக லார்ட்ஸ் டெஸ்டில் இரண்டாவது இன்னிங்ஸில் இந்தியா 42 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. இந்தத் தொடர் தோல்விக்குப் பொறுப்பேற்று அஜித் வடேகர் கிரிக்கெட்டில் இருந்து ஓய்வு பெற்றார்.

1979ல் வெங்கட்ராகவன் தலைமையில் சென்ற இந்திய அணி ஒரு போட்டியில் தோற்று மூன்று போட்டிகளை டிரா செய்தது.

1982ல் கபில் தேவ் தலைமையில் சென்ற இந்திய அணி ஒரு போட்டியில் தோற்று, இரண்டு போட்டிகளை டிரா செய்தது.

**<u>உலகக் கோப்பை வென்ற பிறகு</u>**

1986ல் மீண்டும் கபில் தேவ் தலைமையில் சென்ற இந்திய அணி மூன்று டெஸ்ட் போட்டிகள் கொண்ட தொடரை 2-0 என வென்றது. பல ஆண்டுகளுக்குப் பிறகு இந்திய அணி இங்கிலாந்தில் டெஸ்ட் போட்டியை வென்றது.

அதிக ரன்கள் அடித்த வீரர் ***திலீப் வெங்கசர்க்கார் - 360 ரன்கள்***

அதிக விக்கெட்டுகள் வீழ்த்திய வீரர் - ***சேட்டன் சர்மா - 16 விக்கெட்டுகள்***



1990ல் அசாருதீன் தலைமையிலான இந்திய அணி இளம் வீரர்கள் மற்றும் அனுபவ வீரர்கள் கொண்ட கலவையாக இருந்தது. ஆனாலும் மூன்று போட்டிகள் கொண்ட டெஸ்ட் தொடரை 0-1 எனத் தோற்றது.

1996ல் மீண்டும் அசாருதீன் தலைமையில் சென்ற இந்திய அணி அதே போல் தோற்று வந்தது. 1996 தொடரில் சவுரவ் கங்குலி, ராகுல் டிராவிட், வெங்கடேஷ் பிரசாத் ஆகியோர் அறிமுகம் ஆனார்கள்.

**<u>2000க்குப் பிறகு</u>**

1996ல் அறிமுகமான கங்குலி, 2002 தொடருக்கு கேப்டன் ஆனார். லீட்ஸில் நடைபெற்ற மூன்றாவது டெஸ்டில் இந்தியா இன்னிங்ஸ் வெற்றி பெற்றது. தொடரை 1-1 என சமன் செய்தது.

2007ல் ராகுல் டிராவிட் தலைமையில் இந்திய அணி மூன்று டெஸ்ட் போட்டிகளில் ஆடியது. இரண்டாவது டெஸ்ட் போட்டியில் வென்றது. ஜாகீர்கான் 9 விக்கெட்டுகள் வீழ்த்தினார். முதல் மற்றும் மூன்றாவது டெஸ்ட் டிரா ஆனதால் இந்திய அணி தொடரை 1-0 என வென்றது. அனில் கும்ப்ளே தனது முதல் சதத்தை இந்தத் தொடரில் அடித்தார்.




2011ல் தோனி தலைமையிலான இந்திய அணி 4 டெஸ்ட் போட்டிகளிலும் தோற்றது.

2014ல் மீண்டும் தோனி தலைமையிலான அணி 5 டெஸ்ட் போட்டிகளில் ஆடியது. ஒரு போட்டியில் வென்றது, ஒரு போட்டி டிரா. 3 போட்டிகளில் இங்கிலாந்து வென்று, தொடரையும் வென்றது.

2018ல் விராட் கோலி தலைமையில் இந்திய அணி 5 டெஸ்ட் போட்டிகளில் ஆடியது. ஒரு போட்டியில் வென்று, நான்கு போட்டிகளில் தோற்றது.

2021ல் மீண்டும் கோலி தலைமையில் இந்திய அணி சென்றது. 5 போட்டிகள் கொண்ட டெஸ்ட் தொடரில் முதல் போட்டி டிரா, இரண்டாவது மற்றும் நான்காவது போட்டியில் இந்தியா வெற்றி. மூன்றாவது போட்டியில் இங்கிலாந்து வெற்றி பெற்றது. 5வது டெஸ்ட் கோவிட் பெருந்தொற்று காரணமாக 2022க்கு ஒத்தி வைக்கப்பட்டது. ஜஸ்பிரிட் பும்ரா கேப்டனாக செயல்பட்டார். அந்தப் போட்டியில் இந்தியா தோற்றது. தொடர் 2-2 என சமனில் முடிந்தது.




கில் தலைமையிலான இந்திய அணி இந்த ஆண்டு என்ன செய்ய போகிறது, பொறுத்திருந்து பார்ப்போம்.

**<u>இங்கிலாந்து சுற்றுப்பயணத்துக்கான இந்திய டெஸ்ட் அணி.</u>**

**பேட்ஸ்மேன்கள்:** கில், ஜெய்ஸ்வால், ராகுல், சுதர்சன், ஈஸ்வரன், கருண்.

**விக்கெட் கீப்பர்கள்**- பண்ட், ஜூரல்

**ஆல்ரவுண்டர்கள்** - நிதீஷ், ஜடேஜா, சுந்தர், ஷர்துல்

**பந்துவீச்சாளர்கள்**- பும்ரா, சிராஜ், பிரசித், ஆகாஷ் தீப், அர்ஷ்தீப் &கு ல்தீப்.

# லக்னோ சூப்பர் ஜெயன்ட்ஸ்

- *சு. பழனி செல்வகுமார்*

**ஏலம்**

லக்னோ சூப்பர் ஜெயன்ட்ஸ் அணி ஏலத்திற்குத் தயாராகும் போது கேப்டன் ராகுலைக் கழற்றிவிட்டது. நிக்கோலஸ் பூரான், ரவி பிஸ்னாய், மயங்க் யாதவ் என மூன்று சர்வதேசக் கிரிக்கெட் வீரர்களையும் மோசின் கான் மற்றும் ஆயுஷ் பதோனி என சர்வதேசப் போட்டிகள் ஆடாத வீரர்களையும் தக்க வைத்தது.

லக்னோ அணி ஏலத்தில் புது கேப்டனுக்காக ரிசப் பண்டை அதிக விலை கொடுத்து வாங்கியது. டேவிட் மில்லர் மற்றும் ஆவேஸ் கானையும் அதிக விலைக்கு வாங்கியது. 30 முதல் 75 லட்சத்துக்கு நிறைய இளம் வீரர்களை வாங்கியது.




முதல் போட்டியை பரபரப்பான போட்டியாக மாற்றியது லக்னோ. கடைசி ஓவரில் தோற்றது. முக்கியக் காரணம் ஷாபாஸ் அகமதை தவறான நேரத்தில் பயன்படுத்தியது. மோசின் கான் காயத்தில் இருந்து மீளாததால் மாற்று வீரராக வந்தார் சர்துல் தாகூர்.

பேட்டிங்கைப் பொறுத்தவரை முழுக்க முழுக்க வெளிநாட்டு வீரர்களை நம்பியே இருந்தது. ரிசப் பண்ட் பேட்டிங் பார்ம் படுமோசமாக இருந்தது. இந்திய வீரர்களில் ஆயுஷ் பதோனி மட்டுமே சிறப்பாக ஆடினார். அப்துல் சமாத் பரவாயில்லை ரகம்.

பந்துவீச்சில் சர்துல் தாகூர் ஒரு போட்டியின் வெற்றிக்குக் காரணமாக இருந்தார். ஆவேஸ்கான் ஒரு போட்டியில் சிறப்பாகக் கடைசி ஓவர் வீசி வெற்றிக்கு வழி வகுத்தார். ஆனாலும் லக்னோ அணி பந்துவீச்சில் மோசமாகவே இருந்தது.

லக்னோ அணி ஐந்து முறை 200 ரன்களைக் கடந்தது. 6 முறை எதிரணியை 200+ ரன்கள் அடிக்க விட்டதும் லக்னோ அணி தான்.

**கேப்டன்சி**

ரிசப் பண்டிற்குக் கேப்டன்சி அனுபவம் இல்லை. சுழற்பந்து வீச்சாளர்களை எப்படிப் பயன்படுத்துவது என்று தெரியவில்லை. மில்லருக்கு நிறைய வாய்ப்புகள் கொடுத்து விட்டு சமர் ஜோசப்பிற்கு வாய்ப்பே கொடுக்கவில்லை.

மிட்செல் மார்ஷ், மார்க்ரம், நிக்கோலஸ் பூரான் தான் அணியின் பேட்டிங் முதுகெலும்பாக இருந்தனர். மயங்க் யாதவின் காயம் மாபெரும் பின்னடைவு. மணிமாறன் சித்தார்த்தைப் பயன்படுத்தவில்லை. போதுமான வெளிநாட்டு வீரர்கள் இல்லாதது இன்னொரு பிரச்சினை.




அதிக விலைக்கு வாங்கப்பட்ட ஆவேஸ்கான் மற்றும் ஆகாஷ் தீப் ஏமாற்றம் தந்தனர். நிறைய குறைகள் இருந்தாலும் லக்னோ அணி மோசமாக விளையாடவில்லை. ப்ளே ஆஃப்க்குத் தகுதி பெறவில்லை என்றாலும் முடிந்த அளவு நன்றாக ஆடியது பாராட்டுக்குரியது.

**சிறந்த பந்து வீச்சாளர்கள்**

திக்வேஸ் ரத்தி - 14 விக்கெட்டுகள்

ஆவேஸ் கான் - 13 விக்கெட்டுகள்

சர்துல் தாகூர் - 13 விக்கெட்டுகள்

**சிறந்த பேட்ஸ்மேன்கள்**

மிட்செல் மார்ஷ் -627 ரன்கள் ( 1 சதம் & 6 அரை சதங்கள்)

நிக்கோலஸ் பூரான் - 524 ரன்கள் (5 அரை சதங்கள்)

# சிக்ஸர் பதில்கள்

**ரிட்டயர்ட் ஹர்ட், ரிட்டயர்ட் அவுட் என்ன வித்தியாசம்?**

*(விஜயராகவன், திருமழிசை)*

ஒரு பேட்ஸ்மேன் காயம் காரணமாக அல்லது வேறு காரணங்களுக்காக அம்பயர் அனுமதி பெற்று வெளியேறினால் அது ரிட்டயர்ட் நாட் அவுட் ஆகும். அந்த பேட்ஸ்மேன் மீண்டும் வந்து விளையாடலாம். காயம் தவிர்த்து வேறு காரணங்களுக்காக வெளியேறும் போது எதிரணி கேப்டன் சம்மதித்தால் அது ரிட்டயர்ட் நாட் அவுட் ஆகும். இதை ரிட்டயர்ட் ஹர்ட் எனக் குறிப்பிடுகின்றனர். பேட்ஸ்மேன் நாட் அவுட் என்பதால் அவரது சராசரி கணக்கீட்டில் நாட் அவுட் எனக் கொள்ளப்படும்.



1983ல் வெஸ்ட் இண்டீஸ் - இந்தியா டெஸ்ட் போட்டிகளின் போது 154 ரன்கள் அடித்திருந்த கார்டன் க்ரீனிட்ஜ், அவரது 2 வயது மகள் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டதால் போட்டியில் இருந்து வெளியேறினார். மீண்டும் வரவில்லை. எதிரணி கேப்டன் கபில் தேவ் அதை ரிட்டயர்ட் நாட் அவுட் என ஏற்றுக் கொண்டார்.

ஒரு பேட்ஸ்மேன் தானாக முன்வந்து வெளியேறினால் அது ரிட்டயர்ட் அவுட் ஆகும். சம காலத்தில் ரிட்டயர்ட் அவுட் முறை வியூகமாக நடைமுறைப்படுத்தப்படுகிறது.

2001ல் பங்களாதேஷ்க்கு எதிரான டெஸ்ட் போட்டியில் இலங்கை அணியின் அட்டபட்டு மற்றும் ஜெயவர்த்தனே ரிட்டயர்ட் அவுட் முறையில் வெளியேறினர். பிற வீரர்களுக்கு பேட்டிங் பயிற்சி வழங்க செய்யப்பட்டதாகக் கூறப்பட்டது. இது விளையாட்டு நடத்தையைப் பாதிக்கும் என சர்ச்சை ஏற்பட்டது.

ரிட்டயர்ட் அவுட் முறையில் வெளியேறினால் பேட்ஸ்மேன் அவுட் எனக் கொள்ளப்படும். அது அவரது சராசரியைப் பாதிக்கும்.

**இந்திய ஆண்கள் கிரிக்கெட் வீரர்கள் பெயரில் போட்டித் தொடர்கள், விருதுகள் என சிறப்பு செய்யப்படுகிறது, பெண்கள் கிரிக்கெட் வீரர்களுக்கு ஏதேனும் சிறப்பு செய்யப்பட்டுள்ளதா?**

*(அதிவீரன், ராசிபுரம்)*

ஒருநாள் போட்டிகளில் அதிக விக்கெட்டுகளை வீழ்த்திய வீராங்கனையான ஜூலன் கோஸ்வாமி பெயர், கொல்கத்தா ஈடன் கார்டன் மைதானத்தில் ஒரு ஸ்டாண்டுக்கு வைக்கப்பட்டுள்ளது.




இந்தியக் கிரிக்கெட் அணியின் முன்னாள் வீராங்கனையான மித்தாலி ராஜின் வாழ்க்கை வரலாறு *"சபாஷ் மித்தாலி "* என்ற படமாக வந்துள்ளது.

ஜூலன் கோஸ்வாமி வாழ்க்கை வரலாற்றுப் படம் *"சக்டா எக்ஸ்பிரஸ்"* படமாக்கப்பட்டு வெளியிடப்படாமல் உள்ளது.

**உலக டெஸ்ட் சாம்பியன்ஷிப் போட்டியில் அதிக ரன்கள், அதிக விக்கெட்டுகளைக் குவித்த வீரர்கள் யார் யார்?**

*(சரவணன், குரும்பூர்)*

அதிக ரன்கள் குவித்த வீரர் ஜோ ரூட், 64 போட்டிகளில் 117 இன்னிங்ஸில் பேட்டிங் செய்து 5543 ரன்கள் அடித்துள்ளார்.

அதிக விக்கெட்டுகளை வீழ்த்தியவர் நாதன் லைன் 50 போட்டிகளில் 89 இன்னிங்ஸில் பந்து வீசி 210 விக்கெட்டுகளை வீழ்த்தியுள்ளார்.

அதிக கேட்ச்களைப் பிடித்த பீல்டர் ஸ்டீவ் ஸ்மித். 52 போட்டிகளில் 100 இன்னிங்ஸில் பீல்டிங் செய்து 104 கேட்ச்களைப் பிடித்துள்ளார்.

அதிக டிஸ்மிஸல் செய்துள்ள விக்கெட் கீப்பர் அலெக்ஸ் கேரி. 39 போட்டிகளில் 74 இன்னிங்ஸில் கீப்பிங் செய்து 145 கேட்ச் மற்றும் 18 ஸ்டம்பிங் செய்து மொத்தமாக 163 டிஸ்மிஸல் செய்துள்ளார்.




**அதிக டி20 டைட்டில்களை வென்ற வீரர் யார்?**

*(மதுசூதனன், வளசரவாக்கம்)*

அதிக டி20 டைட்டில்களை வென்ற வீரர் டிவைன் பிராவோ. 17 முறை இவர் பங்கேற்ற அணி கோப்பையை வென்றுள்ளது.

ஐபிஎல் தொடரில் ரோகித் சர்மா மற்றும் அம்பதி ராயுடு தலா 6 முறை கோப்பையை வென்ற அணியில் இருந்துள்ளனர்.



# ஒன்டே தி கிரேட்

ஐசிசி தர வரிசை



| அணிகள் | | |
|---|---|---|
| 1 | இந்தியா | 124 |
| 2 | நியூஸிலாந்து | 109 |
| 3 | ஆஸ்திரேலியா | 109 |
| 4 | இலங்கை | 104 |
| 5 | பாகிஸ்தான் | 104 |
| 6 | தென் ஆப்பிரிக்கா | 96 |
| 7 | ஆப்கானிஸ்தான் | 91 |
| 8 | இங்கிலாந்து | 86 |
| 9 | வெஸ்ட் இண்டீஸ் | 79 |
| 10 | பங்களாதேஷ் | 76 |

| பந்து வீச்சாளர் | | |
|---|---|---|
| மகீஷ் தீக்ஷானா | இலங் | 680 |
| குல்தீப் யாதவ் | இந்தி | 650 |
| கேசவ் மகராஜ் | தெ ஆ | 648 |
| பெர்னார்ட் ஸ்கால்ட்ஷ் | நமி | 644 |
| ரஷீத்கான் | ஆப்கா | 640 |
| மிட்செல் சாண்ட்னர் | நியூஸி | 637 |
| மாட் ஹென்றி | நியூஸி | 622 |
| ரவிந்திர ஜடேஜா | இந்தி | 616 |
| ஆடம் ஸாம்பா | ஆஸி | 614 |
| ஜோஷ் ஹசல்வுட் | ஆஸி | 603 |







| பேட்ஸ்மேன் | | | |
|---|---|---|---|
| 1 | சுப்மன் ஹில் | இந்தி | 784 |
| 2 | பாபர் அசாம் | பாக் | 766 |
| 3 | ரோகித் சர்மா | இந்தி | 756 |
| 4 | ஹென்றிச் கிளாஸ்ஸன் | தெ ஆ | 744 |
| 5 | விராட் கோலி | இந்தி | 736 |
| 6 | டேரில் மிட்செல் | நியூஸி | 720 |
| 7 | ஹாரி டெக்டார் | அயர் | 713 |
| 8 | ஷ்ரேயாஸ் ஐயர் | இந்தி | 704 |
| 9 | சரித் அசலங்க | இலங் | 694 |
| 10 | இப்ராஹிம் சத்ரான் | ஆப்கா | 676 |

| ஆல் ரவுண்டர் | | |
|---|---|---|
| அஸ்மத்துல்லா ஓமர்ஷாய் | ஆப்கா | 296 |
| முகமது நபி | ஆப்கா | 292 |
| சிக்கந்தர் ரசா | ஜிம் | 290 |
| மெஹிதி ஹசன் | பங்க | 248 |
| மைக்கேல் பிரேஸ்வெல் | நியூஸி | 246 |
| பிரண்டன் மெக்முலன் | ஸ்காட் | 241 |
| மிட்செல் சாண்ட்னர் | நியூஸி | 238 |
| ரஷீத்கான் | ஆப்கா | 238 |
| க்ளன் மேக்ஸ்வெல் | ஆஸி | 222 |
| ரவிந்திர ஜடேஜா | இந்தி | 220 |
| கெர்ஹார்ட் யராஸ்மஸ் | நமி | 220 |

# அழகு
## மசாலா

*An Initiative of a Group of Woman*

fssai
22424031000208




**NO**
Artificial flavors
Preservatives
Added colors



## விலைப்பட்டியல்

| (1 கிலோ) | MRP | புதிய விலை |
|---|---|---|
| மஞ்சள் தூள் | ரூ.400 | ரூ.300 |
| தனி மிளகாய் தூள் | ரூ.500 | ரூ.350 |
| மல்லி தூள் | ரூ.350 | ரூ.250 |
| குழம்பு மிளகாய் தூள் | ரூ.400 | ரூ.320 |
| ரசப்பொடி | ரூ.700 | ரூ.550 |
| சாம்பார் பொடி | ரூ.440 | ரூ.350 |
| பிரியாணி மசாலா | ரூ.850 | ரூ.700 |
| கரம் மசாலா | ரூ.750 | ரூ.600 |

For Orders
**888 30 29 301**
Taste Made for you!





அனைத்து மசாலாக்களும் 50 கிராம் முதல் 1 கிலோ பேக்குகள் வரை கிடைக்கும்.

Page : 01

# அழகு மசாலா

*An Initiative of a Group of Woman*

fssai
22424031000208




**NO**
Artificial flavors
Preservatives
Added colors



## விலைப்பட்டியல்

(இட்லி பொடி வகைகள்)

| (1 கிலோ) | MRP | புதிய விலை |
|---|---|---|
| இட்லி பொடி | ரூ.350 | ரூ.300 |
| சென்னாகுன்னி பொடி | ரூ.800 | ரூ.600 |
| கருவேப்பிலை பொடி | ரூ.550 | ரூ.450 |

Rice Mix

| | | |
|---|---|---|
| பருப்பு சாதம் பொடி | ரூ.600 | ரூ.400 |

For Orders
**888 30 29 301**
Taste Made for you!





அனைத்து மசாலாக்களும் 50 கிராம் முதல் 1 கிலோ பேக்குகள் வரை கிடைக்கும்.

Page : 02

# மகளிர் கிரிக்கெட் போட்டி முடிவுகள்

| போட்டி | ஆடிய அணிகள் | | மைதானம் | தேதி | வென்ற அணி | ஆட்டநாயகி |
|---|---|---|---|---|---|---|
| ஒரு நாள் | தென் ஆப்பிரிக்கா | இலங்கை | கொழும்பு | மே 02 | இலங்கை | ஹர்ஷிதா சமரவிக்ரம |
| | 235/9 | 237/5 | | | 38 ரன்கள் | 77 |
| ஒரு நாள் | இந்தியா | இலங்கை | கொழும்பு | மே 04 | இலங்கை | நிலக்ஷிகா சில்வா |
| | 275/9 | 278/7 | | | 3 விக்கெட் | 56 |
| ஒரு நாள் | இந்தியா | தென் ஆப்பிரிக்கா | கொழும்பு | மே 07 | இந்தியா | ஜெமீமா ரோடிக்ஸ் |
| | 337/9 | 314/7 | | | 23 ரன்கள் | 123 |
| ஒரு நாள் | தென் ஆப்பிரிக்கா | இலங்கை | கொழும்பு | மே 09 | தென் ஆப்பிரிக்கா | சோலி ட்ரையான் |
| | 315/9 | 239 | | | 76 ரன்கள் | 74 & 5/34 |
| ஒரு நாள் | இந்தியா | இலங்கை | கொழும்பு | மே 11 | இந்தியா | ஸ்மிருதி மந்தனா |
| | 342/7 | 245 | | | 97 ரன்கள் | 116 |
| டி20 | வெஸ்ட் இண்டீஸ் | இங்கிலாந்து | கான்டெர்பரி | மே 21 | இங்கிலாந்து | ஹைலே மாத்தியூஸ் |
| | 146/7 | 150/2 | | | 8 விக்கெட் | 100* |
| டி20 | வெஸ்ட் இண்டீஸ் | இங்கிலாந்து | ஹோவ் | மே 23 | இங்கிலாந்து | எம் ஆர்லோட் |
| | 81/9 | 82/1 | | | 9 விக்கெட் | 3/14 |
| டி20 | இங்கிலாந்து | வெஸ்ட் இண்டீஸ் | செல்ம்ஸ்போர்ட் | மே 26 | இங்கிலாந்து | ஹைலே மாத்தியூஸ் |
| | 144/5 | 127/8 | | | 17 ரன்கள் | 3/32 & 71 |

## மகளிர் கிரிக்கெட் போட்டி முடிவுகள்

| போட்டி | ஆடிய அணிகள் | | மைதானம் | தேதி | வென்ற அணி | ஆட்டநாயகி |
|---|---|---|---|---|---|---|
| ஒரு நாள் | இங்கிலாந்து | வெஸ்ட் இண்டீஸ் | டெர்பி | மே 30 | இங்கிலாந்து | எமி ஜோன்ஸ் |
| | 345/6 | 237 | | | 108 ரன்கள் | 122 & 2 கேட்ச் |



## ***ஷார்ட்ஸ்***

*மகளிர் உலகக் கோப்பைத் தகுதிச் சுற்று ஆசிய மண்டல போட்டித் தொடரில் எமிரேட்ஸ், கத்தார் அணிகள் மோதின. மழை வரும் அபாயம் இருந்ததால் 16 ஓவர்கள் ஆடிய பிறகு எமிரேட்ஸ் அணியின் 10 வீராங்கனைகளும் ரிட்டயரட் அவுட் முறையில் அவுட் ஆவதாக அறிவித்தனர். கிரிக்கெட் வரலாற்றில் 10 பேர் ரிட்டயர்ட் அவுட் ஆவது இதுவே முதல் முறை.*

# டாப் 25 டி20 வீரர்கள்

கிரிக் இன்ஃபோ குழுமத்தின், கிரிக்கெட் மாத இதழ் (Cricket Monthly) டாப் 25, டி20 வீரர்களைப் பட்டியல் இட்டுள்ளது. இந்தியாவைத் தவிர வேறெங்கும் கிளப் போட்டிகள் ஆடாத நிலையிலும், இந்திய வீரர்கள் கணிசமாக இடம் பெற்றுள்ளனர்.

இரண்டு வேகப்பந்து வீச்சாளர்கள் இடம் பெற்றுள்ள இந்தப் பட்டியலில் இரண்டும் இந்தியர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. ஆஸ்திரேலிய வேகப்பந்து வீச்சாளர்கள் யாரும் இடம் பெறவில்லை.

4 சுழற்பந்து வீச்சாளர்கள் இடம் பெற்றுள்ள இந்தப் பட்டியலில் தென்னாப்பிரிக்காவின் இம்ரான் தாஹீர் ஒருவர். இன்னொருவர் முதலிடத்தைப் பிடித்த ரஷீத்கான். ஆசியர்களின் சுழற்பந்து ஆதிக்கம் குறைந்துவிட்டதா?

25. புவனேஷ்வர் குமார் - இந்தியா - வலதுகை மித வேகப்பந்து வீச்சாளர்

24. சாகித் அப்ரீடி - பாகிஸ்தான் - வலதுகை பேட்ஸ்மேன்/ வலதுகை லெக் ஸ்பின்னர்

23. டேன் கிறிஸ்டியன் - ஆஸ்திரேலியா - வலதுகை பேட்ஸ்மேன்/ வலதுகை மித வேகப் பந்து வீச்சாளர்

22. ஜேம்ஸ் வின்ஸ் - இங்கிலாந்து - வலதுகை பேட்ஸ்மேன்

21. பிரெண்டன் மேக்கல்லம் - நியூசிலாந்து - வலதுகை பேட்ஸ்மேன் - விக்கெட் கீப்பர்

20. இம்ரான் தாஹீர் - தென்னாப்பிரிக்கா - வலதுகை லெக் ஸ்பின்னர்




19. விராட் கோலி - இந்தியா - வலதுகை பேட்ஸ்மேன்

18. சுரேஷ் ரெய்னா - இந்தியா - இடதுகை பேட்ஸ்மேன்/ ஆஃப் ஸ்பின்னர்

17. க்ளென் மேக்ஸ்வெல் - ஆஸ்திரேலியா - வலதுகை பேட்ஸ்மேன்/ ஆஃப் ஸ்பின்னர்

16. நிக்கோலஸ் பூரான் - வெஸ்ட் இண்டீஸ் - இடதுகை பேட்ஸ்மேன் - விக்கெட் கீப்பர்.



15. பாப் டுபிளஸிஸ் - தென்னாப்பிரிக்கா - வலதுகை பேட்ஸ்மேன்

14. சூர்யகுமார் யாதவ் - இந்தியா - வலதுகை பேட்ஸ்மேன்

13. மகேந்திர சிங் தோனி - இந்தியா - வலதுகை பேட்ஸ்மேன் - விக்கெட் கீப்பர்

12. ஜாஸ் பட்லர் - இங்கிலாந்து - வலதுகை பேட்ஸ்மேன் - விக்கெட் கீப்பர்

11. டேவிட் வார்னர் - ஆஸ்திரேலியா - இடதுகை பேட்ஸ்மேன்



10. வெயின் ப்ராவோ - வெஸ்ட் இண்டீஸ் - வலதுகை பேட்ஸ்மேன்/ வலதுகை மித வேகப் பந்து வீச்சாளர்

9. ஷேன் வாட்சன் - ஆஸ்திரேலியா - வலதுகை பேட்ஸ்மேன்/ வலதுகை மித வேகப் பந்து வீச்சாளர்

8. கைரன் பொல்லார்ட் - வெஸ்ட் இண்டீஸ் - வலதுகை பேட்ஸ்மேன்/ வலதுகை மித வேகப் பந்து வீச்சாளர்

7. ஜஸ்பிரிட் பும்ரா - இந்தியா - வலதுகை வேகப்பந்து வீச்சாளர்

6. கிறிஸ் கெயில் - வெஸ்ட் இண்டீஸ் - இடதுகை பேட்ஸ்மேன்/ ஆஃப் ஸ்பின்னர்

5. ஆன்ட்ரே ரஸல் - வெஸ்ட் இண்டீஸ் - வலதுகை பேட்ஸ்மேன்/ வலதுகை வேகப்பந்து வீச்சாளர்

4. லசித் மலிங்கா - இலங்கை - வலதுகை வேகப்பந்து வீச்சாளர்

3. ஏபி டீவில்லியர்ஸ் - தென்னாப்பிரிக்கா - வலதுகை பேட்ஸ்மேன்/ விக்கெட் கீப்பர்

2. சுனில் நரைன் - வெஸ்ட் இண்டீஸ் - இடதுகை பேட்ஸ்மேன்/ஆஃப் ஸ்பின்னர்

1. ரஷீத்கான் - ஆப்கானிஸ்தான் - வலதுகை லெக் ஸ்பின்னர்/ வலதுகை பேட்ஸ்மேன்



# ஐபில் 2025 (மே 17-27)

**பெங்களூரு - கொல்கத்தா**

சிறிய இடைவேளைக்குப் பிறகு மீண்டும் தொடங்கியது ஐபிஎல். பெங்களூருவில் நடைபெறவிருந்த போட்டியில் மழை விளையாடியது. மழை விளையாடியது மைதானத்தில் மட்டுமல்ல, கொல்கத்தா அணியின் ப்ளே ஆஃப் வாய்ப்பில் கூட. **போட்டி கைவிடப்பட்டது.**

**பஞ்சாப் - ராஜஸ்தான்**

பஞ்சாப் அணி முதலில் பேட்டிங் செய்து நேகல் வதேரா (70) மற்றும் ஷஷாங் சிங் (59*) அதிரடி அரை சதங்களால் 219 ரன்களைக் குவித்தது. துஷார் தேஷ்பாண்டே 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.



ராஜஸ்தான் அணியின் ஜெய்ஸ்வால் (50) மீண்டும் ஒரு நல்ல துவக்கத்தைத் தந்தார். சூர்யவன்சியும் அதிரடியாக ஆடி 40 ரன்கள் அடித்தார். துருவ் ஜுரெல் (53) அரைசதம் அடித்தார். ஆனால் அவர் அடித்த அரைசதம் வெற்றிக்கு உதவவில்லை. **பஞ்சாப் 10 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது.** ஹர்பிரீட் பிரார் 3 விக்கெட்டுகளையும், யென்சன் & ஓமர்சாய் தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

**டெல்லி - குஜராத்**

துவக்க வீரராகக் களம் இறங்கிய ராகுல் சதத்தால் (112*) டெல்லி அணி 199 ரன்களைக் குவித்தது.



டெல்லி மைதானத்தில் இது குறைந்த ரன்கள் என விக்கெட் இழப்பின்றி வென்றது குஜராத். சாய் சுதர்சன் (108*) சதமடித்தார். கேப்டன் சுப்மன் கில்லுக்கு சதமடிக்க (93*) வாய்ப்பு கிடைக்கவில்லை. **குஜராத் அணி 10 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது.**

**<u>லக்னோ - ஹைதராபாத்</u>**

மிட்செல் மார்ஷ் (65), மார்க்ரம் (61) அரை சதங்களால் லக்னோ அணி 205 ரன்களைக் குவித்தது. எசான் மலிங்கா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.




அபிஷேக் சர்மா அதிரடி அரைசதம்(59) அடித்தார். கிளாஸ்ஸன் (47) மற்றும் இஷான் கிஸன் (35) சிறப்பான பங்களிப்பைத் தர, ஹைதராபாத் அணி இலக்கை எட்டியது. திக்வேஸ் ரத்தி 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார். **ஹைதராபாத் 6 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது.**

**<u>ராஜஸ்தான் - சென்னை</u>**

மகட்ரே (43) & பிரிவிஸ் (42) அதிரடியாக ஆட, மற்றவர்கள் வழக்கம்போல ஆட சென்னை 187 ரன்கள் சேர்த்தது. யுத்வீர் சிங் மற்றும் ஆகாஷ் மத்வால் தலா 3 விக்கெட்டுகளை வீழ்த்தினர்.




சூர்யவன்சி (57) & ஜெய்ஸ்வால் (36) நல்ல துவக்கத்தைத் தர, துருவ் ஜூரல் ராஜஸ்தான் அணியை வெற்றிக்கு அழைத்து சென்றார். அஸ்வின் 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார். **ராஜஸ்தான் 6 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது**.

**<u>மும்பை - டெல்லி</u>**

சூர்ய குமாரின் அதிரடி 73 மற்றும் நாமன் திர்ரின் கடைசிக்கட்ட அசத்தல் 24 ரன்கள் மூலமாக மும்பை 180 என்ற கௌரவ இலக்கை எட்டியது. முகேஷ் குமார் 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.



சகார் தொடக்கி வைத்த விக்கெட் வேட்டையை பும்ரா மற்றும் சாண்ட்னர் தொடர, டெல்லி 121 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. சமீர் ரிஸ்வியின் 39 மட்டுமே ஒரே ஆறுதல். பும்ரா மற்றும் சாண்ட்னர் தலா 3 விக்கெட்டுகளை வீழ்த்தினர். **மும்பை 59 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது.**

**<u>குஜராத் - லக்னோ</u>**

மிட்செல் மார்ஷ் அதிரடி சதம் (117) மற்றும் நிக்கோலஸ் பூரானின் அதிரடி அரைசதம் (56*) லக்னோ அணி 235 ரன்கள் எட்ட உதவியது.



கில், பட்லர், ரூதர்போர்ட் தலா 30+ ரன்கள் அடித்து வீழ்ந்தனர். ஷாருக்கான் அதிரடியாக ஆடி அரைசதத்தைப் (57) பதிவு செய்தார். ஆனால் குஜராத் இலக்கை எட்ட முடியவில்லை. ரூர்க்கி 3 விக்கெட்டுகளையும், ஆவேஸ்கான் மற்றும் பதோனி தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர். **லக்னோ 33 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது**.

**<u>பெங்களூரு - ஹைதராபாத்</u>**

ஹைதராபாத் அணி தாங்கள் ஒரு சிறப்பான பேட்டிங் அணி என்பதை மீண்டும் நிரூபித்தது. இஷான் கிஸன் 94 ரன்கள் எடுத்து ஆட்டமிழக்காமல் இருந்தார். ஹைதராபாத் 231 ரன்கள் எடுத்தது. ரோமாரியோ ஷெப்பர்ட் 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.



பெங்களூரு அணி சிறப்பாகத் துவங்கியது. கோலி 43, சால்ட் 66 ரன்கள் அடித்தனர். அதற்குப் பிறகு யாரும் பெரிய அளவில் ஆடாததால் 189 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. கம்மின்ஸ் 3 விக்கெட்டுகளையும், மலிங்கா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர். **ஹைதராபாத் 42 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது**.

**<u>பஞ்சாப் - டெல்லி</u>**

பஞ்சாப் கேப்டன் ஸ்ரேயாஸின் அரைசதம் (53) மற்றும் ஸ்டோய்னிஸின் அதிரடி 44 ரன்களால் பஞ்சாப் 206 ரன்களை எடுத்தது. முஸ்டாபிஸூர் 3 விக்கெட்டுகளையும், விப்ரஜ் & குல்தீப் தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.



சமீர் ரிஸ்வியின் அரைசதம் (58*), ராகுல் மற்றும் கருண் நாயர் பங்களிப்பால் பரபரப்பான போட்டியில் இலக்கை எட்டியது டெல்லி. ஹர்பீரீட் பிரார் 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார். **டெல்லி 6 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது**.

**குஜராத் - சென்னை**

ப்ளே ஆஃப் சுற்று வாய்ப்பை இழந்தது மட்டுமின்றி, கடைசி இடத்தை உறுதி செய்திருந்த சென்னை அணி வீறுகொண்டு எழுந்தது. கான்வே (52), பிரிவிஸ் (67) அரைசதங்களால் 230 ரன்களை எடுத்தது. பிரசித் கிருஷ்ணா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.



குஜராத் அணியின் டாப் ஆர்டர் தோல்வி பின் வரிசை வீரர்களை களத்திற்கு அழைத்தது. பெரிய இலக்கை நெருங்க முடியாமல் 147 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. அதிகபட்சமாக கில் 41 ரன்கள் அடித்தார். அன்ஸூல் கம்போஜ் & நூர் அகமது 3 விக்கெட்டுகளையும், ஜடேஜா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர். **சென்னை 83 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது.**

**கொல்கத்தா - ஹைதராபாத்**

ஹைதராபாத் அணி தனது பேட்டிங் பராக்கிரமங்களைக் காட்டியது. ஹென்ரிக் கிளாஸ்ஸன் (105*) சதமடித்தார். டிராவிஸ் ஹெட் (76) அரைசதம் அடித்தார். ஹைதராபாத் 278 ரன்களைக் குவித்தது. சுனில் நரைன் 3 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.




கொல்கத்தா அணியில் யாரும் 40 ரன்களைத் தொடவில்லை. அதிகபட்சமாக மனிஷ் பான்டே 37 ரன்கள் அடித்தார். கொல்கத்தா 168 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது.

உனாட்கட், மலிங்கா, ஹர்ஷ் துபே தலா 3 விக்கெட்டுகளை வீழ்த்தினர். **ஹைதராபாத் 110 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது.**

<u>பஞ்சாப் - மும்பை</u>

முதலில் பேட்டிங் செய்த மும்பை சூர்யகுமார் அரைசதத்தால் (57) 184 ரன்களை எட்டியது. அர்ஷதீப், யென்சன், வைசாக் தலா 2 விக்கெட்டுகளை வீழ்த்தினர்.




பிரியான்ஷ் ஆர்யா (62), ஜோஷ் இங்லிஷ் (73) அரைசதம் அடித்து இலக்கை எளிதாக எட்ட உதவினர். சாண்ட்னர் 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார். **பஞ்சாப் 7 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது**.

<u>லக்னோ - பெங்களூரு</u>

இந்த ஆண்டில் சரியாக விளையாடாத ரிசப் பண்ட் அதிரடியாக ஆடி சதம் (118*) அடித்தார். மிட்செல் மார்ஷ் வழக்கமான பாணியில் ஆடி அரைசதம் (67) அடித்தார். லக்னோ 227 ரன்கள் எடுத்தது.



கடின இலக்கைத் துரத்திய பெங்களூரு அணிக்குத் துவக்க வீரர்கள் அடித்தளம் அமைத்தனர். விராட் கோலி 54 ரன்கள் அடித்தார். கேப்டன் ஜித்தேஷ் சர்மா அதிரடியாக 33 பந்துகளில் 85 ரன்கள் அடித்து அணியை வெற்றி பெற வைத்தார். **பெங்களூரு 6 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது.** ரூர்க்கி 2 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.




| இந்த மாத போட்டிகள் - ஜூன் 2025 | | | | |
|---|---|---|---|---|
| தேதி | ஆடும் அணிகள் | | மைதானம் | போட்டி |
| ஜூன் 1 | பாகிஸ்தான் | பங்களாதேஷ் | லாகூர் | டி20 |
| ஜூன் 1 | இங்கிலாந்து | வெஸ்ட் இண்டீஸ் | கார்டிப் | ஒருநாள் |
| ஜூன் 3 | இங்கிலாந்து | வெஸ்ட் இண்டீஸ் | ஓவல் | ஒருநாள் |
| ஜூன் 4 | நேபாள் | நெதர்லாந்து | டூண்டீ | ஒருநாள் |
| ஜூன் 6 | இங்கிலாந்து | வெஸ்ட் இண்டீஸ் | செஸ்டர் லீ ஸ்ட்ரீட் | டி20 |
| ஜூன் 6 | ஸ்காட்லாந்து | நெதர்லாந்து | டூண்டீ | ஒருநாள் |
| ஜூன் 8 | இங்கிலாந்து | வெஸ்ட் இண்டீஸ் | பிரிஸ்டல் | டி20 |
| ஜூன் 8 | ஸ்காட்லாந்து | நேபாள் | டூண்டீ | ஒருநாள் |
| ஜூன் 10 | இங்கிலாந்து | வெஸ்ட் இண்டீஸ் | சௌதம்ப்டன் | டி20 |
| ஜூன் 10 | நேபாள் | நெதர்லாந்து | டூண்டீ | ஒருநாள் |
| *ஜூன் 11-15* | *ஆஸ்திரேலியா* | *தென் ஆப்பிரிக்கா* | *லார்ட்ஸ்* | *டெஸ்ட்* |
| ஜூன் 12 | அயர்லாந்து | வெஸ்ட் இண்டீஸ் | ப்ரெடி | டி20 |
| ஜூன் 12 | ஸ்காட்லாந்து | நெதர்லாந்து | டூண்டீ | ஒருநாள் |
| ஜூன் 14 | அயர்லாந்து | வெஸ்ட் இண்டீஸ் | ப்ரெடி | டி20 |
| ஜூன் 15 | அயர்லாந்து | வெஸ்ட் இண்டீஸ் | ப்ரெடி | டி20 |
| *ஜூன் 17-21* | *இலங்கை* | *பங்களாதேஷ்* | *காலி* | *டெஸ்ட்* |
| *ஜூன் 20-24* | *இங்கிலாந்து* | *இந்தியா* | *லீட்ஸ்* | *டெஸ்ட்* |
| *ஜூன் 25-29* | *இலங்கை* | *பங்களாதேஷ்* | *கொழும்பு* | *டெஸ்ட்* |

துடுப்பாட்டம்
கிரிக்கெட்டும் கிரிக்கெட் சார்ந்தும்

| இந்த மாத போட்டிகள் - ஜூன் 2025 | | | | |
|---|---|---|---|---|
| **தேதி** | **ஆடும் அணிகள்** | | **மைதானம்** | **போட்டி** |
| *ஜூன் 25-29* | *வெஸ்ட் இண்டீஸ்* | *ஆஸ்திரேலியா* | *பர்படாஸ்* | *டெஸ்ட்* |
| *ஜூன் 28- ஜூலை 2* | *ஜிம்பாப்வே* | *தென் ஆப்பிரிக்கா* | *புலவாயோ* | *டெஸ்ட்* |

# ஐபிஎல் சுவாரஸ்யங்கள்

- ✓ டெல்லி அணிக் கேப்டன் அக்சர் பட்டேல் விளையாட முடியாததால் சில போட்டிகளுக்கு பாப் டுபிளஸிஸ் கேப்டனாக செயல்பட்டார்.
- ✓ பெங்களூரு அணிக் கேப்டன் ரஜத் படிடார் காயமடைந்ததால் ஜித்தேஷ் சர்மா சில போட்டிகளுக்குக் கேப்டனாக செயல்பட்டார்.
- ✓ குஜராத் அணிக்கு எதிரான போட்டியில் டெல்லி அணியின் கேஎல் ராகுல் சதமடித்தார். இந்த ஆண்டில் சதமடித்த முதல் வலது கை பேட்ஸ்மேன் ராகுல்.
- ✓ ராகுல் சதமடித்த அதே போட்டியில் சேசிங்கில் சதமடித்தார் குஜராத் அணியின் துவக்க வீரர் சாய் சுதர்சன். இந்த ஆண்டில் சேசிங்கில் சதமடித்த முதல் வீரர் சுதர்சன்.
- ✓ மே 3ல் நடைபெற்ற போட்டியில் சென்னை அணியின் ஆயுஷ் மகட்ரே 94 ரன்களில் அவுட் ஆனார். சென்னை அணி 2 ரன்கள் வித்தியாசத்தில் தோற்றது. மே 4ல் நடைபெற்ற போட்டியில் ராஜஸ்தான் அணியின் ரியான் பராக் 95 ரன்னில் அவுட் ஆனார். ராஜஸ்தான் அணி 1 ரன் வித்தியாசத்தில் தோற்றது.



- ✓ டெல்லி அணிக்கு எதிரான போட்டியில் ஹைதராபாத் அணியின் கேப்டன் பாட் கம்மின்ஸ் முதல் ஓவர், மூன்றாவது ஓவர், ஐந்தாவது ஓவர்களில் முதல் பந்தில் விக்கெட் வீழ்த்தினார். இந்த மூன்று விக்கெட்டுகளும் கீப்பர் கேட்ச் என்பது குறிப்பிடத்தக்கது.

- ✓ குஜராத் அணிக்கு எதிரான போட்டியில் மும்பை அணியின் கார்பின் போச் பேட்டிங் செய்யும் போது தலையில் அடிபட்டதால் மாற்று வீரராக அஸ்வனி குமார் களம் இறங்கினார். இந்த ஆண்டில் முதல் (காயம்) மாற்று வீரர் அஸ்வனி குமார்.
- ✓ டெல்லி அணிக்கு எதிரான போட்டியில் 199 ரன்களை சேஸ் செய்த குஜராத் அணி 10 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது. 2025 ஐபிஎல்லில் 10 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்ற ஒரே அணி குஜராத்.
- ✓ லக்னோ அணியின் திக்வேஸ் ரத்தி விக்கெட் எடுத்ததும் எழுதிக் கொண்டாடுவதைத் தொடர்ந்து செய்தததால் ஒரு போட்டியில் விளையாடத் தடை விதிக்கப்பட்டது.
- ✓ குஜராத் அணிக்கு எதிரான போட்டியில் லக்னோ அணியின் துவக்க வீரர் மிட்செல் மார்ஷ் சதமடித்தார். 2025 ஐபிஎல்லில் சதமடித்த முதல் வெளிநாட்டு வீரர் மார்ஷ்.
- ✓ பந்துவீச்சில் எந்த மாற்றமும் செய்யாமல் கடிவாளம் போட்ட குதிரை போல் சென்ற சென்னை அணி, கடைசி லீக் போட்டியில் ஜடேஜாவை முதல் ஓவர் வீச வைத்தது.
- ✓ கொல்கத்தா அணிக்கு எதிரான போட்டியில் ஹைதராபாத் அணி 3 விக்கெட்டுகள் இழப்பிற்கு 278 ரன்களைக் குவித்தது. இந்த சீசனில் அடிக்கப்பட்ட அதிகபட்ச ரன் இது. இந்தப் போட்டியில் ஹைதராபாத் அணியின் கேப்டன் ஹென்ரிக் கிளாஸ்ஸன் சதமடித்தார்.



- ✓ பெரிய அளவில் பேட்டிங் ஆடாத லக்னோ அணியின் கேப்டன் ரிசப் பண்ட் கடைசி லீக் போட்டியில் பெங்களூரு அணிக்கு எதிராக சதமடித்தார். 2025 ஐபிஎல்லில் சதமடித்த முதல் (ஒரே) கேப்டன் ரிசப் பண்ட்.
- ✓ சென்னை அணியில் வலது கை விக்கெட் கீப்பர் பேட்டர் உர்வில் பட்டேல் அறிமுகம் ஆனார்.
- ✓ ஹைதராபாத் அணியில் 22 வயதான இளம் சுழற்பந்து வீச்சாளர் ஹர்ஷ் துபே அறிமுகமானார்.




- ✓ லக்னோ அணிக்கு எதிரான போட்டியில் குஜராத் அணி இளம் கருநீல (லாவெண்டர்) நிற ஆடை அணிந்து விளையாடியது. இது புற்றுநோய் குறித்த விழிப்புணர்வுக்காக.

# கொல்கத்தா நைட்ரைடர்ஸ்

- *சு. பழனி செல்வகுமார்*

**ஏலம்**

மெகா ஏலத்திற்கு செல்லும் முன்பாக கொல்கத்தா ஆறு வீரர்களைத் தன்வசம் வைத்துக் கொண்டது. சுனில் நரைனும், ரஸலும் ஆல்ரவுண்டர்கள். இம்பாக்ட் ப்ளேயர் விதிமுறை வந்த பிறகு ஆல்ரவுண்டர்கள் தேவை இல்லை என்ற நிலை. ரிங்கு அதிரடி பேட்ஸ்மேன், வருண் தரமான சுழற்பந்து வீச்சாளர். ராணா வளர்ந்து வரும் வேகப்பந்து வீச்சாளர். ஆனால் ரமன்தீப் சிங் என்ன அடிப்படையில் தக்கவைக்கப்பட்டார் எனத் தெரியவில்லை.




ஏலத்தில் ஏற்கனவே கோப்பையை வாங்கிய அணியில் பெரிய மாற்றங்கள் செய்ய கொல்கத்தா நைட்ரைடர்ஸ் அணி நிர்வாகம் விரும்பவில்லை. அதே சமயம் கேப்டன் ஸ்ரேயாஸ் ஐயரை ஏலத்தில் வாங்க முடியவில்லை.

வெங்கடேஷ் ஐயரை அதிக விலைக்கு (23.75 கோடி) வாங்கியது தேக்க நிலையை ஏற்படுத்தியது. குர்பாஸ், ரகுவன்சி, வைபவ் அரோரா, மனிஷ் பான்டே, அங்குல் ராய் ஆகியோரை மீண்டும் எடுத்துக் கொண்டது.

அணி சம நிலைக்கு, பின்வரும் மாற்று வீரர்களை எடுத்தது.

ஸ்டார்க் → நோர்க்கியா

சுயாஷ் → மார்க்கண்டே

ரூதர்போர்ட் → பவல்

பரத் → சிசோடியா

ஸ்ரேயாஸ் → ரகானே

ராணா → மொயின்

சமீர → ஸ்பென்ஸர் ஜான்சன்

கொல்கத்தா அணிக்கு மாபெரும் பின்னடைவு உம்ரான் மாலிக் மற்றும் மயங்க் மார்கண்டே போட்டி துவங்கும் முன்பாகவே காயம் அடைந்தது.

கொல்கத்தா அணி ஏற்ற இறக்கங்களை சம அளவில் சந்தித்தது. முதல் ஆறு போட்டியில் மூன்றில் தோல்வி மூன்றில் வெற்றி பெற்றது.

**கேப்டன்சி :**

எல்லா அணிகளும் நீண்ட காலத் திட்டமிடலுடன் கேப்டன்களை நியமித்தது. கொல்கத்தா அணி வித்தியாசமாக அஜிங்கியா ரஹானேவைக் கேப்டனாக்கியது. சுனில் நரைன் அடிக்கும் ஒவ்வொரு ரன்னும் போனஸ் ரன்களைப் போன்றது. அவர் அவுட் ஆனால் அடுத்து இறங்கும் வீரர் பொறுப்பாக ஆடவேண்டும். அந்தப் பொறுப்பை ரஹானேவே எடுத்துக் கொண்டார்.




ரிங்கு சிங், ரமன்தீப் போன்றோருக்கு பேட்டிங் வாய்ப்பு கிடைக்க பேட்டிங் ஆர்டரை மாற்றிப் பார்த்தார் ரஹானே. இந்த சீசனில் ஆகச் சிறந்த கேப்டன் ரஹானே என்றே சொல்லலாம். அணி வெற்றி பெறவில்லை ஆனால் அவரது செயல்பாடுகள் குறை சொல்லும் அளவுக்கு இல்லை. ஒரு போட்டியில் ரகுவன்சியை 8வது வீரராக இறக்கினார் அது மட்டுமே பெரிய தவறு.

நான்கு ரன்கள் வித்தியாசத்தில் தோற்ற அணி, 1 ரன் வித்தியாசத்தில் வென்ற அணி இரண்டுமே கொல்கத்தா தான். 115 ரன்களை சேஸ் செய்யாத அணியும் இது தான். சொதப்பினால் எல்லாரும் சொதப்பும் அணி என்றால் அது கொல்கத்தா நைட்ரைடர்ஸ் தான்.

**சிறந்த பந்து வீச்சாளர்கள்**

வருண் சக்ரவர்த்தி - 17 விக்கெட்டுகள்

வைபவ் அரோரா - 17 விக்கெட்டுகள்

கணிசமான விக்கெட்டுகளை எடுத்தும் வெற்றியில் எதிரொலிக்கவில்லை.

**<u>சிறந்த பேட்ஸ்மேன்கள்</u>**

அஜிங்கியா ரஹானே - 390 ரன்கள் (3 அரைசதம்)

அங்க்கிரிஷ் ரகுவன்சி - 300 ரன்கள் (1 அரைசதம்)

**<u>கொல்கத்தா அணியின் தோல்விக்கான காரணங்கள்</u>**




- ✓ ஆறு வீரர்களைத் தக்கவைத்து, வெங்கடேஷ் ஐயரை பெரிய விலைக்கு வாங்கியதால் ஏலத்தில் மீதித் தொகை குறைவு காரணமாக பெரிய அளவில் வீரர்களை எடுக்க முடியவில்லை.
- ✓ பந்து வீச்சாளர்கள் ஓரளவுக்கு சிறப்பாக வீசினாலும் பேட்டர்கள் எதுவும் செய்யவில்லை. முழுமையான பேட்டிங் தோல்வி இது.
- ✓ சிசோடியா தவிர மற்ற வீரர்களுக்கு வாய்ப்பு கிடைத்தது. இதற்குக் காரணம் நிலையான அணி அமையவில்லை.

# உலக டெஸ்ட் சாம்பியன்ஷிப்

டெஸ்ட் போட்டிகளை சுவாரசியமாக்க, ஐசிசி டெஸ்ட் சாம்பியன்ஷிப்பை உருவாக்கியது. இதன்படி ஐசிசியின் டெஸ்ட் போட்டிகளை, டெஸ்ட் சாம்பியன்ஷிப்பாக மாற்றியது. 9 அணிகள் பங்கேற்கும் இந்தத் தொடரில் ஒவ்வொரு இரண்டு அணிகளுடன் மோதாது. அப்படியே அந்த இரு அணிகள் டெஸ்ட் ஐசிசி அட்டவணைப்படி ஆடினால் அது சாம்பியன்ஷிப்பில் வராது என்பது தான் விதிமுறை. முடிவில் புள்ளிப் பட்டியலில் முதல் இரண்டு இடங்களைப் பிடிக்கும் அணிகளுக்கு இறுதிப் போட்டி நடத்தி கோப்பை வழங்கப்படுகிறது.

**டெஸ்ட் சாம்பியன்ஷிப் 2019 -2021**

முதல் டெஸ்ட் சாம்பியன்ஷிப் தொடர் 2019 - 2021 வரை நடைபெற்றது. இதில் இந்திய அணிக்கு பாகிஸ்தான் மற்றும் இலங்கை அணிக்களுக்கு இடையே போட்டிகள் கிடையாது. இந்தத் தொடரில் நிறையப் போட்டிகள் கோவிட் பெருந்தொற்று காரணமாக ஒத்திவைக்கப்பட்டது அல்லது நடைபெறவில்லை.

இதில் முக்கியப் போட்டி என்றால் வெஸ்ட் இண்டீஸ் அணி பங்களாதேஷ் அணியை வென்றது. சாட்டோகிராமில் நடைபெற்ற போட்டியில் வெஸ்ட் இண்டீஸ் நாலாவது இன்னிங்ஸில் 395 ரன்களை சேஸ் செய்தது. க்ரூமக் போன்னர் 86 மற்றும் கைல் மேயர்ஸ் 210* அடித்து வெற்றிக்கு உதவினர்.

இதன் மூலம் அறிமுகப் போட்டியில் அதிக ரன்கள் குவித்த 2வது வெஸ்ட் இண்டீஸ் வீரர் ஆனார் மேயர்ஸ். ஆசியாவில் நிகழ்த்தபட்ட அதிகபட்ச சேஸ் இது தான்.

**இறுதிப் போட்டி**




இறுதிப் போட்டிக்கு இந்தியா - நியூசிலாந்து அணிகள் தகுதி பெற்றன. போட்டி பொது மைதானமான இங்கிலாந்தின் சௌத்தம்டன் மைதானத்தில் நடைபெற்றது. மழை

காரணமாக கூடுதல் நாள் (ஆறாவது நாள்) தேவைப்பட்டால் நீடிக்கும் என அறிவிக்கப்பட்டது.

இந்தியா முதலில் பேட்டிங் செய்து 217 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. அஜிங்கியா ரஹானே 49 ரன்கள் அடித்தார். கைல் ஜேமிசன் 5 விக்கெட்டுகளை கைப்பற்றினார்.

நியூசிலாந்து முதல் இன்னிங்ஸில் 249 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. டேவோன் கான்வே 54 ரன்கள் அடித்தார். முகமது ஷமி 4 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.

முதல் இன்னிங்ஸ் கிட்டத்தட்ட, சரிசமமாகப் போனது. ஆனால் இரண்டாவது இன்னிங்ஸில் இந்தியா மேலும் சொதப்பி 170 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. அதிகபட்சமாக பண்ட் 41 ரன்கள் எடுத்தார். டிம் சௌதி 4 விக்கெட்டுகளையும், பவுல்ட் 3 விக்கெட்டுகளையும், ஜேமிசன் 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

முதல் நாள் ஆட்டமும், நான்காம் நாள் ஆட்டமும் மழையால் நடைபெறாததால் ஆட்டம் 6வது நாளுக்கு சென்றது. ஆறாவது நாளில் நியூசிலாந்து 8 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் வென்றது. முதல் உலக சாம்பியன்ஷிப் வாங்கிய அணி ஆனது நியூசிலாந்து.

**அதிக ரன்கள் அடித்த வீரர்கள்**

| வீரர்கள் | போட்டிகள் | இன்னிங்ஸ்கள் | ரன்கள் |
|---|---|---|---|
| மார்னஸ் லபுசேன் | 13 | 23 | 1675 |
| ஜோ ரூட் | 20 | 37 | 1660 |
| ஸ்டீவ் ஸ்மித் | 13 | 22 | 1341 |
| பென் ஸ்டோக்ஸ் | 17 | 32 | 1334 |
| அஜிங்கியா ரஹானே | 18 | 30 | 1159 |

**அதிக விக்கெட் எடுத்த வீரர்கள்**

| வீரர்கள் | போட்டிகள் | இன்னிங்ஸ்கள் | விக்கெட்டுகள் |
|---|---|---|---|
| ரவிச்சந்திரன் அஸ்வின் | 14 | 26 | 71 |
| பாட் கம்மின்ஸ் | 14 | 28 | 70 |
| ஸ்டுவேர்ட் பிராட் | 17 | 32 | 69 |
| டிம் சௌதி | 11 | 22 | 56 |
| நாதன் லைன் | 14 | 27 | 56 |

**டெஸ்ட் சாம்பியன்ஷிப் 2021 - 2023**

இரண்டாவது டெஸ்ட் சாம்பியன்ஷிப்பில் இங்கிலாந்து - இந்தியா எதிரான போட்டியில் இங்கிலாந்து 378 ரன்களை சேஸ் செய்து வெற்றி பெற்றது. இரண்டு இன்னிங்ஸிலும் சதமடித்த ஜானி பேர்ஸ்டோ (106 & 114*) ஆட்டநாயகன் ஆனார்.

## இறுதிப் போட்டி

இறுதிப் போட்டிக்கு இந்தியா - ஆஸ்திரேலியா அணிகள் தேர்வு பெற்றன. போட்டி ஓவல் மைதானத்தில் நடைபெற்றது. ஆஸ்திரேலியா முதலில் பேட்டிங் செய்து 469 ரன்களைக் குவித்தது. ஸ்டீவ் ஸ்மித் 121, டிராவிஸ் ஹெட் 163 ரன்கள் குவித்தனர். முகமது சிராஜ் 4 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.

இந்திய அணி முதல் இன்னிங்ஸில் 296 ரன்களே அடித்தது. டாப் ஆர்டர் சொதப்பல். ரஹானே 89 ரன்களும், சர்துல் தாகூர் 51 ரன்களும் அடித்தனர். பாட் கம்மின்ஸ் 3 விக்கெட்டுகளையும், ஸ்டார்க், போலன்ட் & க்ரீன் தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

ஆஸ்திரேலியா இரண்டாவது இன்னிங்ஸில் 8 விக்கெட் இழப்பிற்கு 270 ரன்கள் அடித்து டிக்ளேர் செய்தது. அலெக்ஸ் கேரி 66* ரன்கள் அடித்தார். ஜடேஜா 3 விக்கெட்டுகளையும், ஷமி மற்றும் உமேஷ் யாதவ் தலா 2 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

ஆஸ்திரேலியா 4வது நாள் உணவு இடைவேளைக்கும், தேநீர் இடைவேளைக்கும் இடையில் டிக்ளேர் செய்தது. இலக்கு 444 என்பதால் வெற்றிக்கு வாய்ப்பு குறைவு, இந்தியா நினைத்தால் டிரா செய்யலாம் என்ற நிலை.

ஆனால் இந்தியா 234 ரன்களுக்கு ஆல் அவுட் ஆனது. ரோகித் 43, விராட் கோலி 49, ரஹானே 46 அடித்தனர். நாதன் லைன் 4 விக்கெட்டுகளையும், போலன்ட் 3 விக்கெட்டுகளையும் வீழ்த்தினர்.

ஆஸ்திரேலியா 209 ரன்கள் வித்தியாசத்தில் வென்றது. ஆட்டநாயகன் டிராவிஸ் ஹெட்.



## அதிக ரன்கள் அடித்த வீரர்கள்

| வீரர்கள் | போட்டிகள் | இன்னிங்ஸ்கள் | ரன்கள் |
|---|---|---|---|
| ஜோ ரூட் | 22 | 40 | 1915 |
| உஸ்மான் கவாஜா | 17 | 30 | 1621 |
| மார்னஸ் லபுசேன் | 20 | 25 | 1576 |
| பாபர் அசாம் | 14 | 26 | 1527 |
| ஸ்டீவ் ஸ்மித் | 20 | 32 | 1407 |

## அதிக விக்கெட் எடுத்த வீரர்கள்




| வீரர்கள் | போட்டிகள் | இன்னிங்ஸ்கள் | விக்கெட்டுகள் |
|---|---|---|---|
| நாதன் லைன் | 20 | 34 | 88 |
| ககிஸோ ரபாடா | 13 | 22 | 67 |
| ரவிச்சந்திரன் அஸ்வின் | 13 | 26 | 61 |
| ஜேம்ஸ் ஆண்டர்சன் | 15 | 28 | 58 |
| பாட் கம்மின்ஸ் | 16 | 27 | 57 |

2027 உலகக் கோப்பை தகுதி பெற அஸோஸியேட் அணிகளுக்கிடையே ஒரு நாள் போட்டியை நடத்துகிறது ஐசிசி

| உலகக் கோப்பை லீக்-2 புள்ளிப் பட்டியல் | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| **இடம்** | **அணிகள்** | **போட்டிகள்** | **வெற்றி** | **தோல்வி** | **டை** | **மு இ** | **புள்ளிகள்** | **நி ர ரே** |
| 1 | அமெரிக்கா | 20 | 14 | 6 | 0 | 0 | 28 | 0.758 |
| 2 | நெதர்லாந்து | 20 | 12 | 6 | 0 | 2 | 26 | 0.279 |
| 3 | ஓமன் | 20 | 11 | 7 | 0 | 2 | 24 | 0.057 |
| 4 | ஸ்காட்லாந்து | 16 | 9 | 5 | 0 | 2 | 20 | 1.070 |
| 5 | கனடா | 20 | 9 | 9 | 0 | 2 | 20 | -0.158 |
| 6 | நமீபியா | 20 | 7 | 13 | 0 | 0 | 14 | -0.544 |
| 7 | எமிரேட்ஸ் | 16 | 3 | 13 | 0 | 0 | 6 | -1.294 |
| 8 | நேபாள் | 12 | 2 | 8 | 0 | 2 | 6 | -0.271 |

மு இ - முடிவு இல்லாதவை
நி ர ரே- நிகர ரன் ரேட்

*ஒவ்வொரு அணியும் 36 போட்டிகளில் ஆடும். தொடர் இறுதியில் முதல் நான்கு இடங்களை பெறும் அணிகள் உலகக் கோப்பை தகுதிச்சுற்று தொடரில் ஆடும்.*

# கடைசிப் பக்கம்




இங்கிலாந்து தொடருக்கான இந்திய அணி அறிவிக்கப்பட்டுள்ளது. புதிய கேப்டனான சுப்மன் கில் தலைமையில் இளம் அணி புது டெஸ்ட் சாம்பியன்ஷிப் சீசனைத் துவங்கவுள்ளது. இங்கிலாந்தில் இங்கிலாந்தை எதிர் கொள்வது கடினமான விசயம். இந்த அணி இங்கிலாந்தில் என்ன செய்யப் போகிறது என்பதை பொறுத்திருந்து பார்ப்போம்.

ஐபிஎல், பிஎஸ்எல் தொடர்கள் முடிந்து விட்டன. அடுத்ததாக அமெரிக்காவில் மேஜர் கிரிக்கெட் லீக் துவங்க இருக்கிறது. சர்வதேசப் போட்டிகளில் டெஸ்ட் சாம்பியன்ஷிப் அடுத்த சீசன் துவங்குகிறது. இங்கிலாந்து - வெஸ்ட் இண்டீஸ் வெள்ளைப் பந்து தொடர் இருக்கிறது.

குழந்தைகள் வரைந்த கிரிக்கெட் ஓவியங்கள் இந்த இதழில் வெளியாகியுள்ளது. பங்கேற்ற அனைத்து குழந்தைகளுக்கும், ஊக்குவித்த பெற்றோர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றி. எல்லா ஓவியங்களிலும் தனித்தன்மை இருப்பதைக் காண முடிந்தது குறிப்பிடத்தக்கது. உங்கள் மேலான கருத்துகளை எதிர்பார்க்கிறோம்.

Mail – thuduppattam7@gmail.com

X - @thuduppattam

www.thuduppattam.blogspot.com

Whatsapp - +91 80566 09320



BATTING



**S.பழனி செல்வகுமார்**
மேலாளர்
(செய்திசேகரிப்புப் பிரிவு)



BOWLING



**K.ராமச்சந்திரன்**
மேலாளர்
(மார்க்கெட்டிங் & விளம்பரப் பிரிவு)



FIELDING



**M.கார்த்திகேயன்**
மேலாளர்
(ஒருங்கிணைப்புக் குழு)



WICKET KEEPING



**G.மைக்கேல்ராஜ்**
மேலாளர்
(வடிவமைப்புக் குழு)



# தடுப்பாட்டம்

Designed By : Raam Digital World